20 பக்கங்கள்

REG. No. M. 3886

# ஜன சக்தி

(சோஷியலிஸ்ட் வாரப் பத்திரிகை)

ஆசிரியர் :—ப. ஜீவானந்தன்.

| மாலை 1 | சென்னை, சனிக்கிழமை, 25—6—38 | மலர் 12 |
| --- | --- | --- |

## க்ளெமெண்ட் வாரோஷிலாவ்



"எங்களுக்கு நாடு பிடிக்கும் ஆசை கிடையாது. ஆகையால் நாங்கள் சமாதானத்தையே விரும்புகிறோம். ஆனால் எங்கள்மீது யாரேனும் படையெடுத்துவந்தால், அவர்களை அதல பாதாளத்தில் வீழ்த்துவோம்" என ஸ்டாலினை துணிந்துகூறச் செய்த சோவியத் செஞ்சேனையின் தளகர்த்தர்.

வருடச் சந்தா

ரூ. 3.

தனிப்பிரதி

அணா 1.

# தென்னிந்திய ரயில்வே தொழிலாளர் மகாநாடு

சென்ற 19ந்தேதி, பொன்மலையில் கூடிய இரண்டாவது தென்னிந்திய ரயில்வே தொழிலாளர் மகாநாட்டில் தோழர் பி. ராமமூர்த்தி தொழிலாளர் கொடியை ஏற்றி வைத்தார். பிறகு மகாநாட்டை கனம் ராஜாஜி திறந்து வைத்து தொழிலாளர்கள் ஒற்றுமையாக இருக்க வேண்டுமென்றும், "அவர்கள் குறைகளுக்கு அவர்கள்தான் போராட வேண்டு" மென்றும் தொழிலாளர் ஐக்யமாக இருந்தால் கௌரவமும் பலமும் அதிகமாக ஏற்பட்டு குறைகளைசுலபமாக போக்கிக் கொள்ளமுடியும் எனக்கூறினார். சங்கத்திற்குள் ஒருவருக்கொருவர் விரோதமும், பொறாமையும் இருந்தால் அது பலக் குறைவு. பெரும்பாலோர் அபிப்பிராயம்தான் தர்மம். அதன்படி யாவரும் நடக்கவேண்டும்.

உங்களுக்குள் நல்ல தலைவர்கள் இல்லாவிடில் பிறர் உதவியை நாடினால் இனி சங்கங்களை அங்கீகரிக்க மறுக்கப்பட மாட்டாது. அது நான் முன்பே சொல்லிவந்த போதிலும் இப்பொழுது நான் பிரதம மந்திரி என்ற ஹோதாவில் சொல்லியதால் ஏற்றுக் கொண்டிருக்கிறார்களென்று நான் நினைக்கிறேன். நாங்கள் வேகமாகப் போகவில்லை என்றெல்லாம் நினைக்கவேண்டாம். தோழிலாளர்கள் காங்கிரசுக்கு பக்கபலமாக இருக்கவேண்டுமேன்று கேட்டுக் கோள்கிறேன். கடைசியாக இந்த மகாநாடு வெற்றியடைய வேண்டுகிறேன்."

பிறகு மகாநாட்டின் தலைவர் கே.வெங்கடசாமி நாயுடு,M.L.C. செய்த அக்கிராசனப் பிரசங்கத்தின் சாராம்சம் பின்வருமாறு:-

இந்நாட்டில் தொழிற்சங்க இயக்கம் அனுபவித்துள்ள சங்கடங்கள் அநேகம். சென்ற பல வருடங்களாக தொழிற் சங்க இயக்கம் பிளவுபட்டுக் கிடந்தது. இந்தப் பிளவால் ஏற்படும் அனர்த்தம் எல்லோரும் அனுபவப்பூர்வமாக அறிந்ததே. சமீபத்தில் அ. இ. தொழிற்சங்க காங்கிரசும், தொழிற் சங்க சம்மேளனமும் ஒன்றுபட்டு உழைக்கும்படியான ஒரு சமரசம் திட்டம் ஏற்பட்டது. இந்தத் தொழிற் சங்க ஐக்கியம் நன்கு காப்பாற்றப்படவேண்டும்.

### கான்பூர் நிலைமை

நாம் இப்போது கூடியிருக்கும் சமயம், தொழிலாளர் உலகில் பெரும் கிளர்ச்சிகள் நடக்கும் சமயம். எல்லாத் தொழில்களிலும் தகராறுகள் இருக்கின்றன. கான்பூரில் 40,000 தொழிலாளர்கள் முதலாளிகளின் சண்டித்தனத்தை எதிர்த்து வேலைநிறுத்தம் செய்திருக்கிறார்கள். காங்கிரஸ் சர்க்காரின் விசாரணைக் கமிட்டி செய்த சிபார்சை முதலாளிகள் நிராகரித்திருக்கிறார்கள். ஆகவே கான்பூர் தொழிலாளர்கள் தமது உரிமைக்காக மட்டுமல்லாது இந்தியாவிலுள்ள எல்லாத் தொழிலாளருக்காகவும் வீரத்துடன் தியாகம் செய்கிறார்கள்.

### அடிப்படைக் காரணங்கள்

இப்போது தொழிலாளரிடையே காணப்படும் கொந்தளிப்பின் காரணங்களை ஆராய்ச்சி செய்து பார்ப்போம்.

சென்ற 9 வருஷ காலமாக முதலாளிகள் தாம் ஏற்றுக் கொள்ளவேண்டிய கஷ்டத்தையும் சிரமத்தையும் தொழிலாளர் தலையில் சுமத்தி வந்திருக்கிறார்கள். ஆனால் வர்த்தக மந்தம் ஒருவாறு நீங்கி, தொழில்கள் லாபகரமாக நடக்கும் இச்சமயத்தில் அதனால் ஏற்படும் நன்மையை தொழிலாளருக்கு பகிர்ந்துகொடுக்க அவர்களுக்கு மனம் வரவில்லை! இதுதான் இப்போது ஏற்பட்டுள்ள கொந்தளிப்புக்குக் காரணம்.

காங்கிரஸ் சர்க்கார் இப்போது பதவியிலிருப்பதால், தொழிலாளர்களுக்குப் பேச்சு சுதந்தரமும் ஸ்தாபன சுதந்தரமும் ஏற்பட்டு இருக்கிறது. ஆகையால் தொழிலாளர்கள் தமது கோரிக்கைகளுக்காகப் போராட முடிகிறது.

இந்நாட்டில் தொழிலாளர்களுக்கு உலகில் மற்ற நாடுகளிலுள்ள சர்வசாதாரண உரிமைகள் மறுக்கப்பட்டிருக்கின்றன. 8 மணி நேர வேலை வயோதிக உதவி சம்பளத்துடன் ரஜா இவை பற்றிய சர்வதேச ஒப்பந்தங்களை இந்திய சர்க்கார் இங்கு ஊர்ஜிதம் செய்யாமலிருக்கிறார்கள்.

தொழிலாளரின் அற்ப சொற்பமான உரிமைகளையும் பாதுகாக்க சட்டமில்லை.

ஆகையால் தொழிலாளரின் உரிமைப்பற்றி சட்டம் இயற்றப்படவேண்டியது மிகவும் அவசரமான தேவையாகும்.

### சங்கத்துக்கு அங்கீகாரம்

தொழிற் சங்கங்களுக்கு முதலாளிகள் அங்கீகார மளிக்க வேண்டுமென்று 1931-லேயே விட்லி கமிஷன் சிபார்சு செய்தும் முதலாளிகள் முன்போலவே நடக்கிறார்கள்.

தொழிற் சங்கங்களை முதலாளிகள் அங்கீகரிக்காமல் இருப்பதுதான் தொழிற் சச்சரவுகள் பெருகுவதற்கு காரணமென்று சமீபத்தில் கோயம்புத்தூர் தொழில் விசாரணை கோர்ட்டும் சொல்லியிருக்கிறது. சமீபத்தில் மாகாண சர்க்கார்களால் நியமிக்கப்பட்ட ஒவ்வொரு கமிட்டியும் இதை வற்புறுத்தியிருக்கிறது.

பெயரளவில் அங்கீகாரமளித்தால் போதாது.

உதாரணமாக ஒரு தொழிலாளி வேலையினின்று நீக்கப்படுவதாக வைத்துக் கொள்வோம். மானேஜ்மென்டின் தீர்ப்பை ஆக்ஷேபித்து ஒரு சுதந்தர அதிகாரி முன் அப்பீல் செய்ய சங்கத்துக்கு உரிமை வேண்டும்.

"அந்த மத்யஸ்த அதிகாரி, அத்தொழிலாளி நீக்கப்பட்டது நியாயமல்ல வென்று தீர்ப்பு கூறுவாராகில் 6 மாதச் சம்பளம் நஷ்ட ஈடாக தரப்பட வேண்டும்" என்று பாபு ராஜேந்திர பிரசாத் கூறியிருக்கிறார். இதுபோன்ற உரிமைகளுடன் தொழிற் சங்கங்களுக்கு அங்கீகாரம் கிடைக்கவேண்டும்.

தொழிற் சங்க அங்கீகாரத்திக்கு முதலாளிகள் அனாவசியமான, அசாத்தியமான நிபந்தனைகள் போடக்கூடாது.

உங்கள் சங்கத்தை அங்கீகரிக்க, எஸ். ஐ. ஆர். மானேஜ்மென்ட், சில நிபந்தனைகள் போடுவதாக அறிகிறேன். அவர்கள் பாரி அன்கோ முதலாளிகளை பின்பற்றட்டும். தமது யோசனையைப் பற்றி புனராலோசனை செய்யட்டும். ஒரு நிபந்தனையுமின்றி உங்கள் சங்கத்தை அங்கீகரிக்கட்டும்.

உங்கள் சங்கம் சக்தியுள்ளதாயில்லாவிடில் அங்கீகாரம் இருந்தும் இல்லாதிருந்தும் பயன் ஒன்றுதான்.

உங்களது சங்கம் பலமுள்ளதாக இருந்தால் உங்கள் முதலாளி உங்கள் கோரிக்கைகளை நெடுங்காலம் அலக்ஷியம் செய்துவிட முடியாது. இதை நான் அனுபவ பூர்வமாக அறிந்திருக்கிறேன்.

### கோல்டன்ராக் சிறைக்கூடமா?

இன்னும் ஒரு மிக முக்கியமான விஷயத்தைப் பற்றி பிரஸ்தாபிக்க விரும்புகிறேன். அதுதான் தொழிலாளர்கள் பொதுக் கூட்டம் நடத்துவது பற்றிய உரிமை.

இந்த கோல்டன்ராக் காலனி ஒரு சிறு டவுன் போன்றது. இதற்குள் நீங்கள் பொதுக் கூட்டம் போடக்கூடாதென்று தடுக்கப்படுகிறது.

அதாவது 3000 குடும்பங்களில் 15000 பேர் வாழ்கிறீர்கள். இந்தப் பெரிய ஜனசமூகத்துக்கு இங்கு பேச்சு சுதந்தரமும், பொதுக் கூட்டம் போடும் சுதந்தரமும், மறுக்கப்படுவது சிறு விஷயமல்ல.

இங்கு பெரிய மதில் சுவர்கள் இருப்பதை நான் காண்கிறேன். ஆனால் இந்தச் சுவர்கள் ஒரு சிறைச் சாலையின் சுவர்களாக ஆகின்றன வென்பதை அதிகாரிகள் உணருவார்களா? அவ்வாறு இதை சிறைச்சாலையாக்க வேண்டுமென்பது அவர்களது விருப்பமல்ல வென்று நம்புகிறேன். ஆகையால் கூட்டம் கூடக் கூடாதென்ற நிபந்தனையை அவர்கள் ரத்துச் செய்யட்டும்.

வேலை செய்யுமிடங்களிலேயே தொழிற் சங்கங்களுக்கு சந்தா வசூலிக்க உரிமை யிருக்க வேண்டும். வசூலிப்பவர்களுக்கு ரஜாவும் தர வேண்டும். இவ் விஷயத்தில் சென்னை டிராம்வே கம்பெனியிலிருப்பதை இங்கும் ஏஜென்ட் பின்பற்றட்டும்.

### குறைந்த பக்ஷ சம்பளம்

இங்கு குறைந்த பக்ஷ சம்பளம் ரூ. 12ல் கூட இருப்பதாக அறிகிறேன். தேசத்தின் முக்கிய வர்த்தகத் தொழிலான ரயில்வேயில் இவ்வளவு குறைந்த சம்பளம் இருப்பது நியாயமல்ல. கிராச்சி காங்கிரஸ் தீர்மானத்திலுள்ளது போன்ற குறைந்தபக்ஷ சம்பளத் திட்டம் இங்கு அமுலுக்கு வரவேண்டும்.

### சமஷ்டி

தொழிலாளர்களுக் கென்று பிரத்யேகமான பிரச்னைகள் பல இருப்பினும், உங்களைச் சுற்றிலுமுள்ள மற்ற பிரச்னைகளை மறந்து விடலாகாது.

உதாரணமாக சமஷ்டிச் சனியன் ஒன்று வருகிறது. அதை எதிர்ப்பதில் நீங்கள் ஒன்றுபட வேண்டும். சமஷ்டி வந்தால் ரயில்வே மீது பொதுஜன ஆதிக்கம் சிறிதுமில்லாமல் ஏதேச்சாதிகாரம் ஏற்பட்டுவிடும்.

### காங்கிரசில் சேரவேண்டும்

எல்லா தொழிலாளரும் ஏகாதிபத்ய எதிர்ப்பில் காங்கிரசுடன் பூர்ணமாக ஒத்துழைக்க வேண்டியதால் காங்கிரஸ் சேர வேண்டும்.

### யுத்த எதிர்ப்பு

சர்வதேச நிலைமையில் பெரிய மாறுதல்கள் ஏற்படுகின்றன. யுத்தம் வரக்கூடுமென்று எதிர்பார்க்க வேண்டிய நிலையிலிருக்கிறோம்.

இந்த யுத்தத்தில் இந்தியாவையும் சிக்க வைப்பதற்கு பிரிட்டன் முயற்சிக்கும். இந்த முயற்சியை காங்கிரஸ் உறுதியுடன் எதிர்க்கும். இதில் நீங்கள் காங்கிரஸுடன் ஒத்துழைக்க வேண்டும்.

# வெளிநாட்டுச் செய்திகள்

### அயர்லாந்து

சமீபத்தில் நடைபெற்ற எலெக்ஷனில் டி’வேலராக் கட்சிக்கு பெருமித வெற்றி கிடைத்திருக்கிறது. இந்த எலெக்ஷன், பிரிட்டனுடன் செய்துள்ள ஒப்பந்தத்திற்கு, நாட்டின் எண்ணத்தை தெரிந்து கொள்வதற்காக நடைபெற்றது. டிவேலராக் கட்சி, முன் மெஜாரிட்டியாக இல்லை. ஆதலால்தான் பொதுஜன அபிப்பிராயத்தை இந்த உடன்படிக்கையைப் பற்றித் தெரிந்துகொள்ள எலெக்ஷன் நடத்தினுர் டிவேலரா. அதில் பெருமித வெற்றியுமடைந்தார்.

### ஜெர்மனி

“யூதர்கள் சூரையாட்டம்” மறுபடியும் ஜெர்மனியில் துவக்கப்பட்டாய் விட்டது. அவர்கள் வியாபாரங்கள் தடுக்கப்பட்டிருக்கிறது. இது பொது ஜனங்களிடையே, ஹிட்லர் ஆட்சியைப் பற்றி அதிருப்தியைப் போக்குவதற்காம்! நாஜிக் கொடுமைகளை இதுவரை கவனித்துக் கொண்டிருந்தவர்கள் தங்கள் நாட்டு ஜனங்கள் (யூதர்கள்) கஷ்டத்திற்குள்ளாக்கப்படுவதை பொருத்துக் கொண்டிருக்க முடியாது என்கின்றனர்.

*   *   *

சென்றவாரம் ஆஸ்திரிய நாட்டின் கடன்களுக்கு ஜெர்மனி பொறுப்பாளி அல்ல எனக் கூறியது. இது சம்மந்தமாக அமெரிக்க ஐக்கிய குடியரசுத் தலைவர் ரூஸ்வெல்ட் ஒரு கடிதம் ஜெர்மனிக்கு எழுதியிருக்கிறுர். இது சம்பந்தமான பிரிட்டனின் நடத்தையானது ஜெர்மனியை இந்த பிரச்சினைப் பற்றி பிரிட்டிஷ் கவர்ன்மெண்டின் பிரதிநிதிகளோடு விவாதிக்க இணங்கச் செய்திருக்கிறது.

### இத்தாலி

ஆங்கிலோ—இத்தாலி ஒப்பந்தத்தை உடனடியாக நிறைவேற்றித் தீரவேண்டுமென்று இராப்பகலாக இரு நாட்டின் பிரிதிநிதிகளும் விவாதித்து வருகிறுர்கள். இந்த உடன்படிக்கை நிறைவேற்றப்படுமானுல் ஸ்பெயின் கவர்ன்மெண்டை சீக்கிரம் ஒழிக்க அது உதவிசெய்யும். ஆனுல் அவ்வளவு சிக்கிரம், அவர்கள் நினைப்பது போல் ஸ்பெயின் குடியரசு கவிழ்ந்து விடுமா? பண்டித ஜவஹர்லால் போன்ற மற்றவர்கள், ஸ்பெயின் நாட்டுமக்களின் தீரத்தைப் போற்றி ஸ்பெயினில் பிராங்கோ தோல்வி யடைவது நிச்சயமென்கின்றனர்.

### ஐக்கிய அமெரிக்கா

‘நாஜி கங்காணிகள்’ எனக் குற்றஞ் சாட்டி 18 ஜெர்மன் கவர்ன்மெண்ட் உத்யோகஸ்தர்களை, அமெரிக்கா ஐக்கிய குடியரசு கைதி செய்திருக்கிறது.

### லண்டன்

பிரதம மந்திரி சேம்பர்லேன் வெளிநாட்டு விஷயங்களைப்பற்றி காமன்ஸ் சபையில் பேசும்பொழுது “சீனுவிலும், ஸ்பெயினிலும், பொது ஜனங்கள் மீது, ஆகாய வெடிகுண்டு வீச்சு செய்வது துணிந்து செய்யும் அக்ரமமாகும். சர்வதேச சங்க சட்டப்படி, நிரபராதிகளான ஜனங்கள் மீது குண்டு வீச்சு ஆகாயத்திலிருந்தோ, நிலத்திலிருந்தோ, க்ப்பலிலிருந்தோ செய்யக்கூடாது. அவைத மீறி செய்வதானது, பொது ஜனங்களை அழித்தாவது வெற்றி கொள்ளவேண்டும் என்பதே’’ என்று கூறியுள்ளார்.

*   *   *

ஸ்பெயின், சீனு யுத்த சம்பந்தமாக “இரண்டு மணி நேரம் நடுநிலைமைக் கமிட்டி விவாதித்து ஓர் நல்ல முடிவுக்கு வந்திருப்பதாக” சோவியத் பிரதிநிதி கூறினுர். கூட்டம் முடியவில்லை.

### சீன யுத்தம்

ஷாங்கைப் போர் முனையிலிருந்து ஜப்பானியர் பின்னேக்கிப் போய்க் கொண்டிருக்கின்றனர்.

ஷாங்கையின் வடப் போர் முனைக்கு 70,000 ஜப்பானியத் துருப்புகள் புதிதாக வந்திருக்கின்றன. அவர்களை முறியடிக்க 700,000 சீனத் துருப்புகள் ஷாங்கைக்குச் சென்றிருக்கின்றன.

பீகிங், மஞ்சள் நதியில் வெள்ளம். இதை உபயோகித்துக் கொண்டு, கோரில்லா சண்டை செய்கிறுர்கள் சீனர்கள். இவர்கள் பீகிங்-ஜெஹோல் ரயில்வேயில், குப்பேகாவிலுள்ள பாலத்தை எரித்துவிட்டனர். 27 சீன சேனைப் பிரிவுகள், ரயில்வேயைத் தாக்கி போக்குவரத்தை தடைப்படுத்துகின்றன என ஜப்பானியர்களே ஒத்துக்கொள்கின்றனர்.

ஜனசக்தி

சென்னை, 25—6—'38.

# கான்பூர் நிலைமை

இந்திய தொழிலாளர்கள் இன்று ஒட்டமும் நடையுமாக முன்னேறுகிறார்கள். கொத்தடிமையிலிருந்து பூரண சுயேச்சைக்கு கனவேகத்தில் மாறிவரும் இந்தியாவில் துள்ளித் துடிக்கும் தங்களுடைய மகத்தான புரட்சி சக்தியை சங்கம் சேர்ந்துள்ள தொழிலாளி மக்கள் பகிரங்கப்படுத்தி வருவது அசாதாரணமல்ல. இந்த நவயுக சக்தியின் விமர்சனத்திற்கு கான்பூர் தொழிலாளர்கள் இன்று ஓர் உயர்தரமான எடுத்துக்காட்டாக இருக்கிறார்கள். அவர்களை இன்று வெற்றிமேல் வெற்றித் தாவித் தாவி தழுவுகிறது.

ஏனைய தொழிலாளர்களுக்கு முன் மாதிரியாக விளங்கும் கான்பூர் தொழிலாளிகள் ஒரு மகத்தான வேலை நிறுத்தத்தில் இந்நாள் ஈடுபட்டிருக்கிறார்கள். அகில இந்தியத் தலைவர்களில் முன்னணியில் வைத்து எண்ணத் தகுந்தவரும் தொழிலாளி முதலாளி இணக்கக் கொள்கையான காந்தீயத்தில் பரிபூரண நம்பிக்கையுடையவருமாகிய ராஜேந்திர பாபுவைத் தலைவராகக் கொண்ட ஓர் விசாரணைக் கமிட்டியை, ஐக்கிய மாகாண சர்க்கார் கான்பூர் தொழிலாளர்களின் நிலமையைப் பரிசீலனை செய்ய நியமித்தது. அந்த விசாரணைக் கமிட்டியார் நன்றாக விசாரணை செய்து சில சிபார்சுகளை வெளியிட்டனர். சர்க்காரும் அச்சிபார்சுகளை அப்படியே ஒப்புக்கொண்டது.

ஆனால் மில் சொந்தக்காரர்களோ வரட்டுப் பிடிவாதத்துடன் பொதுஜனச் செல்வாக்கு பெற்றுள்ள சர்க்காரை அலட்சியம் செய்து பொறுப்பு வாய்ந்த தலைவர்களின் சிபார்சுகளை அங்கீகரிக்க மறுத்து விட்டார்கள். இதன் காரணமாக தங்களுடைய உரிமையை நிலைநிறுத்தும் பொருட்டு சுயநல பித்தத்தால் தலைக்கனம் கொண்டு நிற்கும் முதலாளிகளைப் பணிய வைப்பான் வேண்டி தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தில் இறங்கவேண்டியதாயிற்று. ஆகவே இன்று கான்பூரில் நடைபெறும் வேலை நிறுத்தத்திற்கு காரணபூதர்கள் முதலாளிகள் தான்.

இந்த வேலை நிறுத்தம் வெகு அற்புதமானது. பழைய வேலை நிறுத்தங்களுக்கு இல்லாத ஓர் தனி அழகு இதில் ஜ்வலிக்கிறது. இவ்வேலை நிறுத்தத்தில் ஆயிரக்கணக்கான வீரத் தோழர்கள் வெள்ளப் பிரவாகம்போல் வந்து கலந்து செந்தூள் பறக்கக் கிளர்ச்சி செய்தபோதிலும், மருந்துக்குக்கூட பலாத்காரம் தலைகாட்டவில்லை. இது வரையிலில்லாத இந்த அற்புதம் நிகழக் காரணம் என்ன? இந்த வேலை நிறுத்தத்தில் தான் தொழிலாளிகள் பொதுஜன செல்வாக்குள்ள மந்திரி சபையார் அனுஷ்டித்த பாரபட்சமற்ற நடு நிலைமைப் போக்கைக் கண்டார்கள். பழைய ஆட்சியின் முறைகள் மாண்டு மண்ணாயின. சென்ற கால சர்க்காரில் முதலாளிகளுக்கு சகல சௌகர்யங்களும் கிடைத்தன. தொழிலாளர்களுக்கிடையிலேயே இருந்து வேலை நிறுத்தத்தை உடைப்பதற்காக, முதலாளிகளின் கைக் கருவியாகும் பிணமிகளை (Black-legs) தயாரிப்பதில் பழைய சர்க்கார் மில் சொந்தக்காரர்களுக்கு பெருந்துணை செய்தது. உதாரணமாக அந்த நாளில் போலீஸ் புலிகள் ஏழைத் தொழிலாளர்களின் வீடுகளில் பலாத்காரமாக புகுந்து நாயை இழுப்பது போல் கரகரவென்று வெளியே இழுத்து வந்து நையப் புடைத்து வேலைக்குத் துரத்திச் சென்றார்கள். பொதுஜன செல்வாக்குள்ள காங்கிரஸ் மந்திரி சபை வந்ததும் மேற்கூறிய அநியாயங்களும், அட்டூழியங்களும் சூரியனைக் கண்ட பனிபோல் மறைந்தன. ஆகையால் முதன் முறையாக தங்களுடைய ஆதிக்கத்தை நிலைநிறுத்த வேண்டுமானால் காங்கிரஸ் மந்திரி சபையை எதிர்த்து தங்களுடைய சக்தியைப் பரீட்சித்துப் பார்க்க வேண்டிய நிலைமை முதலாளிகளுக்கு ஏற்பட்டது. மாறாக சென்ற காலத்திலெல்லாம் தொழிலாளிகள் தங்களுடைய உரிமைகளை நிலைநாட்ட நேர்ந்தபொழுது, மில் சொந்தக்காரர்களையும் அவர்களுக்கு அனுசரணையாக நின்ற சர்க்கார் அதிகாரத்தையும் எதிர்க்க வேண்டியிருந்தது. ஆனால் இந்த வேலை நிறுத்தத்திலோ, யுத்தகளத்தில் தங்களுடைய நேர் எதிரியான முதலாளிகளை மாத்திரம் எதிர்த்தால் போதுமென்ற சௌகர்யமேற்பட்டிருக்கிறது.

முன்பெல்லாம் வேலை நிறுத்தங்கள் ஏற்பட்டால் காங்கிரஸ் கமிட்டி மாவிலும் படாமல், மாங்காவிலும் படாமல் நின்றது. அந்த சந்தர்ப்பங்களில் காங்கிரஸ் கமிட்டி முதலாளிப் பாம்பிற்குத் தலையையும், தொழிலாளி மீனுக்கு வாலையும் காட்டி வந்தது. ஆனால் இன்றைய கான்பூர் காங்கிரஸ் கமிட்டி மதில்மேற் பூனையல்ல. அது கொஞ்சங்கூட தங்கு தடையின்றி தனது பூரண ஆதரவையும், அனுதாபத்தையும் தொழிலாளர் பக்கமே செலுத்துகிறது. காங்கிரஸ் கமிட்டியின் இந்த தெளிவான மனோபாவம் இந்த வேலை நிறுத்தத்தில் இன்னொரு விசேஷம்.

ஐக்கிய மாகாண சர்க்கார் இப்பொழுது வெளியிட்டிருக்கும் அறிக்கை, வேலை நிறுத்தத்தை ஓர் முடிவுக்குக் கொண்டுவந்து அமைதியை நிலை நாட்டுவதற்கு வழி காட்டுவதாக இருக்கிறது. சர்க்காரின் தீர்மானம், விசாரணைக் கமிட்டியின் சிபார்சுகள் முழுவதையும் வற்புறுத்தவில்லை. அது சில முக்கிய கோரிக்கைகளையே—சம்பள உயர்வு போன்றவை—உடனடியாக அமுலுக்கு கொண்டு வர வேண்டும் என்று தீர்மானித்திருக்கிறது. சிற்சில விஷயங்களை விசேஷப் பரிசீலனைக்காக விட்டுவிட்டது. அப்படி இருந்தும் முதலாளிகள் சர்க்காரின் தீர்மானத்திற்கு இணங்கி வரவில்லை. ஆனால் காங்கிரஸ் மந்திரி சபையின் பொதுஜன செல்வாக்கை மதித்து, தொழிலாளர்கள் அதன் தீர்மானத்திற்கு இணங்கி அதனுடைய அனுசரணையை தங்கள் பக்கம் இழுத்து நிற்கிறார்கள்.

இறுதியாக கான்பூர் தொழிலாளர்களின் இவ்வளவு பெரிய வெற்றிக்கு காரணங்கள் எவை?

1. கான்பூர் தொழிலாளர்களிடம் பிரிக்க முடியாதபடி பலமான ஒற்றுமை காணப்படுகிறது. அதோடு அவர்களிடம், மில் சொந்தக்காரர்களின் அரட்டல் மிரட்டல்களுக்கு கொஞ்சமும் மசியாத அஞ்சா நெஞ்சமும் பிரகாசிக்கிறது.

2. கான்பூர் தொழிலாளர்களின் தலைவர்கள் சரியான பேர்வழிகள். தெளிந்த ஞானத்துடன் தொழிலாளர்களை தக்க பாதையில் நடத்தி செல்லும் ஆற்றலுடையவர்களாயிருக்கிறார்கள்.

3. பொதுஜன செல்வாக்குப் பெற்றுள்ள காங்கிரஸ் மந்திரி சபை, கான்பூர் தொழிலாளர்களுக்கு பக்கபலமாக நிற்கிறது. அது உண்மையிலேயே தொழிலாளர்களிடம் அனுதாபம் கொண்டிருக்கிறது.

# —: குறிப்புகள் :—

## காரியக் கமிட்டித் தீர்மானம்

“காங்கிரஸ் கமிட்டிகளில் அங்கம் வகிக்கும் எவரும், காங்கிரஸ் டிக்கெட்டில் சட்டசபை அங்கத்தினரான எவரும், வேறு எந்த ராஜீய ஸ்தாபனத்திலும் அங்கம் வகிக்கலாகாது என்று அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக்கு இக்கமிட்டி சிபார்சு செய்கிறது.”

மேற்கூறிய தீர்மானம், சமீபத்தில் நடந்த தமிழ் மாகாண காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானமாகும். இந்தத் தீர்மானம் வெறும் மொட்டையாயிருக்கிறதே யொழிய, கொஞ்சம் கூடத் தெளிவாயில்லை. ஆகவே, இதை ஆபத்தான தீர்மானமாக நாம் கருதுகிறோம். கொஞ்ச காலமாக, காங்கிரஸின் பெருந்தலைவர்களில் அநேகர், தங்களுடைய செய்கைகளைப்பற்றி, ஞாயகமாக, ஆரோக்கியகரமான குணதோஷம் கூறுவதைக்கூட சகிக்க மாட்டாதவர்களாகி விட்டார்கள். சர்தார் வல்லபாய் படேலை எடுத்துக்கொண்டாலோ, ஹரிபுராவில், அவர் இன்னும் ஓர் அடி முன்னால் போனார். “அளவுக்கு மிஞ்சி உங்களுடைய போக்குகளை நாங்கள் சகித்திருக்கிறோம்” என்று அவர் விஷயாலோசனைக் கமிட்டியில் சோஷியலிஸ்டுகளை நோக்கி, ஆத்திரத்துடன் கூறினார். இந்த மனோபாவம்தான் காரியக் கமிட்டித் தீர்மானத்திலும் காணக்கிடக்கிறது. அபிப்பிராய சுதந்தரத்துக்கு விட்டுக் கொடுக்காத மனமும், சகிப்புத்தன்மையின்மையும் அவர்களிடம் எவ்வளவு தூரம் குமுறிக் கொண்டிருக்கின்றன வென்பதைத்தான் மேற்படி தீர்மானம் அப்பட்டமாகக் காட்டுகிறது.

காங்கிரஸுக்கு விரோதமான அரசியல் ஸ்தாபனங்களில் இருப்பவர்களுக்கு, காங்கிரஸில் இடம் ஏற்படாமல் விதிகள் செய்வதில் அர்த்தமுண்டு. அனுகூல சத்துருக்களாயிருந்து, காங்கிரஸை குலைக்க வருகிறவர்களைத் தடுக்கும் நோக்கத்தோடு மேற்படி தீர்மானம் கொண்டுவரப்பட்டிருந்தால் நாம் திருப்திப்பட்டிருப்போம். ஆனால், இந்தத் தீர்மானம் கொண்டு வரப்பட்டதின் நோக்கம் வேறு. இத்தீர்மானத்தின்மூலம் தீவிரவாதிகளின் கைக்கும் காலுக்கும் விலங்குகள் போட சந்தர்ப்பம் தேடப்படுகிறது. காங்கிரஸ் மந்திரி சபையையும், பெருந் தலைவர்களின் நடவடிக்கைகளையும், தீவிர வாதிகள் திடமாக ஞாயமாகப் பரிசீலனை செய்வதைத் தடுப்பதும், சட்டசபை, ஸ்தல ஸ்தாபனங்களுக்கு வெளியில், காங்கிரஸின் மூலமும் வர்க்கஸ்தாபனங்களின் மூலமும் பொது ஜனங்களை ஏகாதிபத்ய எதிர்ப்புப் போராட்டத்திற்குத் தயாரிக்கும் முயற்சியிலிருந்து தீவிர வாதிகளை (சோஷியலிஸ்டுகளை) விலக்குவதும்தான் மேற்சொன்ன தீர்மானத்தின் முக்கிய நோக்கங்கள்.

இத்தகைய தீர்மானங்களால் காங்கிரஸுக்கு—ஏகாதிபத்ய எதிர்ப்பு ஸ்தாபனமாகிய காங்கிரஸுக்கு—பொதுஜன சக்தியை மூலபலமாகக் கொண்டுள்ள காங்கிரஸுக்கு—பாதகம்தான் விளையுமே யன்றி சாதகம் ஏற்படாது. ஆகவே, அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி மேற்சொன்ன தீர்மானத்துக்கு அணுவளவும் ஆதரவளிக்காதென்றே நம்புகிறோம்.

## சிவப்புக் கொடி

மங்களூரிலிருந்து திரும்பிவரும் வழியில் ஒரு ஸ்டேஷனில், திரளான விவசாயிகள் கூடி நின்று முதல் மந்திரியார் கனம் ராஜகோபாலாச்சாரியாரை வரவேற்றார்கள். அவர்களுடைய ஆர்ப்பாட்ட வரவேற்பில் தேசியக் கொடியோடு செங்கொடியும் பறந்ததாம். சிவப்புக் கொடியைக் கண்டதும் கனம் ராஜாஜீ, ஆர்ப்பாட்டத்தின் அமைச்சர்களை நோக்கி, “ரஷ்யக் கொடியை ஏன் பிடித்துக் கொண்டிருக்கிறீர்கள்?” என்று கேட்டாராம். கனம் ராஜாஜீக்கும் அவரைப் போலுள்ள அபிப்பிராயமுடையோர்க்கும், நாம் ஒரு உண்மையை ஞாபகப்படுத்த விரும்புகிறோம். அன்று, அந்த விவசாயிகள் ஏந்தி நின்ற சிவப்புக் கொடி, ரஷ்யக் கொடி அல்ல. நிச்சயமாகச் சொல்வோம், அது ரஷ்ய சர்க்காரின் கொடி அல்ல என்று.

சிவப்புக் கொடியில் காணப்படும் அரிவாளும் சம்மட்டியும், அடக்கி ஒடுக்கி நசுக்கப்பட்டுக் கிடக்கும் தொழிலாளிகள், விவசாயிகள் ஆகிய இரண்டு கூட்டத்தார்க்கும் ஏற்பட்டு வருகிற, ஏற்பட்டுத் தீர வேண்டிய ஒற்றுமையின் சின்னங்கள் என்பதை உணரவேண்டும். அமுக்கிக்கொண்டிருக்கும் சொல்லமுடியாத கொடுமைகளிலிருந்து தங்களை விடுவித்துக்கொள்ள அவர்களால் நடத்தப்படும் விடுதலைப் போராட்டத்தில் நாமும் ஒன்றுபட்டு நிற்கிறோம். அதுவன்றி, சிவப்புக் கொடியை ரஷ்யக் கொடி யென்று கூறி, குட்டையைக் குழப்புவது, வேண்டுமென்றே பொய்ப் புரட்டில் இறங்குவதாகும்.

மேலும் பிரதம மந்திரியார், ஆர்ப்பாட்டக்காரர்களோடு, செங்கொடி விஷயமாகப் பேசிய பேச்சுக்களைக் கவனித்தால், காங்கிரஸ் தலைவர்களில் பெரும்பாலோர் சிவப்புக் கொடியைப் பற்றி எத்தகைய மனோபாவம் கொண்டிருக்கிறார்களென்பது விளங்கும். தேசியக் கொடியாக காங்கிரஸின் மூவர்ணக் கொடி யிருக்கும்பொழுது, சிவப்புக்கொடி எதற்காக? என்று சிலர் கேட்கிறார்கள். தேசியக் கொடிக்குப் போட்டியாக, சோஷியலிஸ்டுகளால், சிவப்புக் கொடி சிருஷ்டிக்கப்பட்டதென்று சிலர் கயிறு திரிக்கிறார்கள். காங்கிரஸ் கொடிக்கு நேர் விரோதமான கொடி செங்கொடி யென்று சிலர் பிரசாரஞ் செய்கிறார்கள். சுருங்கச் சொன்னால், பலர் பலவிதமாக செங்கொடியைப் பற்றி நினைக்கிறார்கள். ஆனால், உண்மை யென்ன தெரியுமா? சிவப்புக் கொடி ஏகாதிபத்ய எதிர்ப்புக் கொடி, சர்வதேசங்களிலுமுள்ள தொழிலாளர்—விவசாயிகளின் கொடி. ஆகவே, செங்கொடி தேசியக் கொடிக்கு பலத்தை யளிக்கும் கொடியே யன்றி, விரோதமான கொடியல்ல.

## சூளை மில் வேலை நிறுத்தம்.

சூளை மில் தகராறு சம்பந்தமாக சர்க்கார் ஓர் சமரசபோர்டை நியமித்தது வாசகர்களுக்கு ஞாபகமிருக்கலாம். அந்த போர்டார் ஒரு அறிக்கை வெளியிட்டார்கள். அந்த அறிக்கையைப்போல் மகாமோசமான அறிக்கை, வேறு எந்தத்தொழில் தகராறிலும் எந்த சமரசபோர்டாரும் வெளியிட்டதில்லை. அந்த அறிக்கையைப் படித்துப் பார்த்தால், தொழிலாளர்களின் தொல்லைகளைத் தீர்க்க மார்க்கம் கண்டுபிடிப்பதைப் பார்க்கிலும், முதலாளிகளுக்குள்ள கஷ்டங்களையும் அவர்களுடைய பெருந்தன்மையையும் வர்ணிப்பதிலேயே சமரச போர்டார் சிரமமெடுத்துக்கொண்டிருக்கிறார்களென்று தெரியவரும். அதனால்தான், அறிக்கையின் அடக்கத்திலிருந்து, முதலாளிகள் மில் வைத்து நடத்துவது தொழிலாளிகளுக்கு வேலை கொடுக்க வேண்டுமென்ற பரோபகாரத்திற்காகவே யென்றும், சுயலாபத்திற்காக அல்லவென்றும் எண்ணும்படி இருக்கிறது.

இந்தமாதிரியான லக்ஷணமுள்ள அறிக்கையைப் பார்த்த பிறகுதான், தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தார்கள். அவர்கள் வேலை நிறுத்தம் செய்தது ஞாயமென்றுதான் நாமும் கருதுகிறோம். தொல்லைகள் தீர, வேறு வழிகளிலெல்லாம் ஆனவரையில் முயற்சி செய்து பார்த்தும் தொழிலாளர்களுக்கு வெற்றி கிடைக்கவில்லை. அப்படியானால், அவர்கள் வேலை நிறுத்தமான கடைசி மார்க்கத்தில் செல்லாது வேறு என்ன செய்வது?

வேலை நிறுத்தம் ஆரம்பமான பிறகு லேபர் கமிஷனர் ஒரு கோரிக்கை விடுத்தார். வேலை நிறுத்தக்காரர்கள் திரும்பி வேலைக்குப்போய் விடும்பக்ஷத்தில், கம்பெனியாரின் வரவு செலவுக் கணக்குகளைத் தாம் பரிசீலனை செய்வதாக அவர் கூறினார். தொழிலாளர்கள் இந்தக் கோரிக்கைக்கு இணங்கிவிடுவார்களா? குறைபாடுகள் தீர்க்கப்படுமென்று உத்தரவாதம் கொடுக்கப்படாத வரையில், தொழிலாளர்கள் கமிஷனரின் அபிப்பிராயங்களை அங்கீகரிப்பார்களா? மாட்டார்களென்றே நாம் திடமாக நம்புகிறோம். தங்களுடைய குறைகளைப் போக்கிக்கொள்ள போராடித்தீர வேண்டியது தொழிலாளர்களுக்கு இன்று மிக முக்கியமாகப் போய்விட்டது. “10ந் தேதி சங்கம் வெளியிட்ட அறிக்கையில் காணப்படும் கோரிக்கைகளைப் பற்றி லேபர் கமிஷனர் பேசத் தவறிவிட்டார்” என்று யூனியன் இந்த சந்தர்ப்பத்தில் [illegible] காட்டியிருப்பது மிகப் பொருத்[illegible]

தொழிலாளர்கள் போரா[illegible] கள். வேலை நிறுத்தப்போர[illegible] பட்டு நிற்கும் சூளை மில் [illegible] க்கு, நாம் நமது ஆழ்ந்[illegible] தெரிவித்துக்கொள்கி[illegible]

# வெளிநாட்டில் இந்தியாவின் தூதர்



பண்டித ஜவஹர்லால் நேரு பார்ஸிலோனுவுக்குச் சென்று ஸ்பெயின் யுத்த அரங்கங்களைப் பார்வையிட்டார். ஸ்பெயின் நாட்டு தேசிய தலைவர், கம்யூனிஸ்ட் தலைவர்களையும் சந்தித்தார். பிறகு கம்யூனிஸ்ட் தலைவர்களைப் போற்றி புகழ்ந்தார். அவர் பார்ஸிலோனுவிலிருக்கும் பொழுது மும்முறை ஆகாய விமானப் படையெடுப்பு நடந்தது. அதை அவர் தங்கியிருந்த ஹோட்டலின் பால்கனியிலிருந்து பார்வையிட்டார். ஸ்பெயின் யுத்த மந்திரியையும் சந்தித்து நிலைமையைப் பற்றி விவாதித்தார்.

*       *       *

ஸ்பெயினில் அவர் ஐந்து தினங்கள் தங்கியிருந்தது பற்றி ராய்ட்டர் நிருபர் அவரைப் பேட்டி கண்டு விசாரித்த பொழுது அவர் பின்வருமாறு தெரிவித்தார்:—

“சர்க்கார் கட்சியினர் இறுதியில் வெற்றி யடைவது திண்ணமெனப் பார்ஸிலோனுவிலுள்ள அனைவரும் உறுதியான நம்பிக்கைக் கொண்டிருக்கின்றனர். யுத்தம் இன்னும் சுமார் இரண்டு வருஷகாலம் நீடிக்குமென அங்குள்ள ஜனங்கள் பேசிக்கொள்கிறார்கள். எவ்வளவு காலமானாலும் அவர்களை எங்ஙனம் ஒடுக்கக்கூடுமென எனக்குத் தெரியவில்லை. அவர்களிடை வரவரக் கட்டுப்பாடு அதிகரித்து வருகிறது. அவர்களுடைய ராணுவமும் முன்புளந்த காலத்திலும் இருந்ததைவிட இப்பொழுது சிறந்த நிலையிலிருந்து வருகிறது.

அராஜகரெனச் சொல்லப்படுவோர் குடியரசு வாதிகள். இவர்களுடைய தலைமைக் காரியாலயங்களுக்கும் நான் சென்று பார்வையிட்டேன். அவர்கள் தங்களிடையுள்ள வித்தியாசங்களை மறந்து ஒன்று பட்டுவிட்டனர். குடியரசு சர்க்காரின் தலைவர், அந்நியநாட்டு மந்திரி, கடலோனியா சர்க்காரின் தலைவர் இவர்களையும் நான் கண்டு பேசினேன். சர்க்கார் காரியாலயங்களும் அதிகாரிகளும் கட்டுப்பாடான வகையில், முறை தவறாமல் செயல்புரிந்து வருவது பிரமிக்கத் தக்கதாயிருந்தது.

ஒவ்வொரு இரவும் கலக விமா... அந்நகர் மீது படை... நான் நேரில் பார்... அங்குள்ள மக்... னம் தவறாமல் ...ச் சமாளித்து ...ங்கு மிகவும் சிறை பிடிக்கப்பட்ட பல ஜெர்மன், இத்தாலிய விமானிகளை நான் பார்த்தேன். தாங்கள் ஒரு குறைவுமின்றி நன்கு நடத்தப்படுவதாக அவர்கள் என்னிடம் தெரிவித்தனர். அங்கு எங்களுக்குக்கிடைத்துவந்த உணவைவிட அவர்களுக்கு இன்னும் சிறந்த உணவளிக்கப்பட்டு வருகிறது.

பார்ஸிலோனுவிலுள்ள குழந்தைகள் விடுதிகளையும், சமூக க்ஷேமார்த்தமான வேலைகளையும் நான் பார்வையிட்டேன். அவை உண்மையில் மிகவும் பிரமிக்கத் தக்கவையாயிருந்தன.

நான் போர் முனையிலிருந்து ஐந்து கிலோமீடர் தூரத்திற்குட்பட்ட ஸ்தலம் வரை சென்றேன். அங்கு சர்வதேசப் படையைச் சேர்ந்த பலரைச் சந்தித்தேன். அவர்களனைவரும் மிகவும் உற்சாகத்துடன் காணப்பட்டனர்.

பிரான்ஸிலிருந்து திரும்பி வந்த 43-வது ஸ்பானியப் படையினரில் பலரை நேற்று பார்ஸிலோனுவில் பார்த்தேன். அவர்கள் கூட உற்சாகத்துடனிருக்கக் காணப்பட்டனர்.

*       *       *

பண்டித ஜவஹர்லால் நேரு பார்ஸிலோனுவிலிருந்து 19-ந் தேதி பாரிஸ் போய்ச் சேர்ந்தார். அவர் அன்றிரவு 7 மணிக்கு பாரிஸ் ரேடியோ ஸ்டேஷனிலிருந்து ஒரு பிரசங்கம் செய்தார். அதன் சாராம்சம் :

“பிரான்ஸிலுள்ள நமது நண்பர்களுக்கு சில வார்த்தைகள் சொல்ல எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்திருப்பது பற்றி நான் மகிழ்ச்சி யடைகிறேன். ஏனெனில் பிரான்ஸ் எப்பொழுதும் ஒரு சுதந்திரக் கோட்டையாக விளங்கி வந்திருக்கிறது. இந்திய சுதந்திரப் போராட்டத்தை நடத்திவரும் நாங்கள் உணர்ச்சியும் ஊக்கமும் பெறுவதற்குப் பிரான்ஸையும் பிரஞ்சு சரித்திரத்தையும் அடிக்கடிக் கவனித்து வந்திருக்கிறோம்.

இன்று ஐரோப்பா நெருக்கடிமயமாயிருந்து வருகிறது. எந்த சமயத்தில் மிக்க கோரமான யுத்தம் துவங்குமோவென நாமனைவரும் அஞ்சத்தக்க நிலைமை தற்போதிருந்து வருகிறது. தங்கள் பிரச்னைகளிலேயே முழுக் கவனம் செலுத்திவரும் ஐரோப்பிய ஜனங்கள் இந்தியாவையும், கீழ் நாடுகளையும் மறப்பது இயற்கை. எனினும் இந்தியாவும், இந்திய சுதந்திரமும் உலகப் பிரச்னையின் ஒரு பாகமேயாகும்.

இந்தியா ஏகாதிபத்திய ஆதிக்கத்தினின்றும் விடுபட்டுப் பூர்ண சுதந்திரம் பெற்றாலன்றி உலகில் நிலையான சமாதான மேற்படுவதற்கில்லை.

உலகில் நெடுங்காலமாகச் சுதந்திரத்திற்காகப் போராடி வந்திருக்கும் பிரஞ்சு மக்கள் எங்கள் சுதந்திரப் போராட்ட விஷயத்தில் தங்கள் நல்லுணர்ச்சியை வெளியிடுவரென நாங்கள் எதிர்பார்க்கிறோம்.

வீர உணர்ச்சி நிறைந்த ஸ்பானிய மக்களை ஒருபொழுதும் நசுக்க முடியாதென்பது பற்றி எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை. அங்கு போராட்டம் எவ்வளவு காலம் நீடித்தபோதிலும் அந்நியப் படைகள் ஸ்பெயினைத் தங்களுக் கடிமைப்படுத்த முடியாது. ஸ்பானியப் போராட்டத்தை இந்தியா மிக்க சிரத்தையுடன் கவனித்துவந்திருக்கிறது. இந்தியாவின் அனுதாபமெல்லாம் ஸ்பானியக் குடியரசைச் சேர்ந்த மக்களின் தரப்பிலேயே இருக்கிறது: இந்தப் போர் உலகமுழுதும் சுதந்திரத்திற்காக நடைபெறும் போராடத்தில்மிகவும் முக்கியமானதோர் அங்கமாகுமென நாங்கள்கருதுகிறோம்.”

தாம் ஐரோப்பாவில் மூன்று அல்லது நான்குமாதகாலம் தங்கியிருக்கப்போவதாகவும் இந்தியப் பிரச்னைகளை மனதில் கொண்டு பல்வேறு ஐரோப்பிய நாடுகளிலுள்ள நிலைமையைத் தாம் ஆராய விருப்பதாகவும் பண்டிதநேரு தெரிவித்துள்ளார்.

## ‘நேஷனல் பிரன்ட்டுக்கு’ தடை

சில காலமாக, சிங்கப்பூர் நியூஸ் ஏஜெண்டிற்கு பம்பாயிலிருந்து வெளிவரும் ‘நேஷனல் பிரன்ட்’ என்ற மார்க்ஸிஸ்ட் பத்திரிகையை அனுப்பிக் கொண்டிருந்தார்கள். ஆனால் ஏஜெண்டிற்கு ஒரு பிரதிகூட கிடைக்கவில்லையாம்! ஆகையால் ரிஜிஸ்டர் போஸ்டில் சில பிரதிகளை அனுப்பினார்கள். அந்த ரிஜிஸ்டர் போஸ்ட், “தடுக்கப்பட்ட பிரசுரம் இறக்குமதி தடை செய்யப்பட்டது” என எழுதப்பட்டு, பார்ஸல் உடைக்கப்படாமல் திரும்பி வந்துவிட்டது.

இந்தப் பார்ஸலில், சுங்க இலாகா அதிகாரிகளின் முத்திரையோ, சி. ஐ. டி. இலாகாவின் முத்திரையோ காணப்படவில்லை.

ஆகையால், சிங்கப்பூர் போஸ்டல் அதிகாரிகளே, சி. ஐ. டி. களாக வேலை செய்கிறார்கள் எனப் புலப்படுகிறது. இந்தியாவிலிருந்து வெளிவரும் எல்லா தேசியப் பத்திரிகைகளும் சிங்கப்பூரில் தடுக்கப்பட்டிருக்கின்றனவா? அல்லது ‘நேஷனல் பிரன்ட்’ மட்டும் அந்த “கௌரவத்திற்கு” ஆளாகி இருக்கிறதா?

# சமஷ்டியைப் புதைக்க கச்சை கட்டுகிறது காங்கிரஸ்

## அச்சுத் தொழிலாளிகள் நவநாகரிகத்தின் ஊற்றுக்கேணிகள்

### அச்சுத் தொழிலாளர் மகாநாட்டில் தோழர் A. S. K. அய்யங்கார் முழக்கம்

19-6-38ல் தூத்துக்குடியில் நடந்த தூத்துக்குடி அச்சுத் தொழிலாளர் இரண்டாவது மகாநாட்டில் தலைமை வகித்த தோழர் ஏ. எஸ். கே. அய்யங்கார் பிரசங்கத்தின் சுருக்கம்:

தோழர்களே!

உங்களுடைய மகாநாட்டிற்குத் தலைமை வகித்து நடத்தும் கௌரவத்தை எனக்கு அளித்ததற்காக உங்களுக்கு என்னுடைய மனமார்ந்த வந்தனத்தை தெரிவித்துக் கொள்ளுகிறேன். அந்தக் கௌரவம் எனக்குத் தனிப்பட்ட ஹோதாவில் கொடுத்ததல்ல. அப்படி ஏற்றுக் கொள்ளவும் முடியாது.

நிலன், புலன் உற்பத்தி சாதனங்கள் யாவும் தனியுடைமையில் இருப்பதைப் போக்கி, உழைப்பாளி தன்னுடைய உழைப்பின் முழுப்பலனை அனுபவிக்கும் ஓர் உன்னதப் பொதுவுடைமைச் சமூகத்தை ஸ்தாபிக்கவேண்டும் என்பதுதான் கம்யூனிஸ்டுகளும் சோஷியலிஸ்டுகளுமாகிய எங்களுடைய நோக்கம்—கொள்கை. நீங்கள் எனக்களித்த பெருமை மேற் சொன்ன எங்களுடைய நோக்கத்திற்கு அளித்த பெருமையாகும்.

இந்தியாவிலுள்ள தொழிலாளிகளாகிய நாம் விரும்புவது என்ன? சதாசர்வகாலமும் வாய்க்கும் கைக்குமாக போராடிப் போராடி பஞ்சைப் பாட்டுப்பாடி சாவதா அல்லது வறுமை, பசிப்பிணியற்ற உன்னத உலகத்தை சிருஷ்டிப்பதா? நம்முடைய அன்றாடச் சாப்பாட்டிற்காக மாத்திரம் நாம் போராடுவது வெறும் பொருளாதாரப் போராட்டம். சுபிக்ஷமான உலக சிருஷ்டிக்காகச் செய்யும் போராட்டம் அரசியல் போராட்டமாக மாறி விடுகிறது. சுருங்கக் கூறினால் உணவுக்காக நாடு முழுமையும் நடக்கும் போராட்டந்தான் அரசியல் போராட்டம்.

இந்த நாட்டுத் தொழிலாளர் தலையில் ஓர் பெரிய பொறுப்பு இருக்கிறது. வரும் புரட்சியில் அவர்கள் முன்னணியில் நின்று போராடினாலொழிய நம் நாட்டு விடுதலை என்பது பகற்கனவாகவே முடியும். பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தை கடந்த போராட்டங்களில் பலவித ஆயுதங்களைக் கொண்டு தாக்கினோம். நம் லக்ஷியம் கைகூடியதா? இல்லை. ஆகவே அதைவிட மேலான ஆயுதத்தை இனி நாம் நம்முடைய ஆயுதச் சாலையிலிருந்து எடுத்து உபயோகிக்க வேண்டியிருக்கிறது. அதுதான் "பொதுவேலை நிறுத்தம்" என்கிற சரியான ஆயுதம். அதைப் பற்றி லெனின் என்ன சொல்லுகிறார் என்பது உங்களுக்குத் தெரிந்ததே. 'அரசியல் அதிகாரத்தைப் பிடுங்க பொது வேலை நிறுத்தந்தான் சரியான ஆயுதம்' என்கிறார். உங்களுடைய அன்றாட பொருளாதாரக் கோரிக்கைகளுக்காக நீங்கள் செய்யும் ஒவ்வொரு போராட்டமும் நம் நாட்டு விடுதலைப் போராட்டத்தின் ஓர் பாகம் என்பதை நீங்கள் என்றும் மறக்க வேண்டாம்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்யம் சமஷ்டி அரசியல் திட்டத்தை நம்மீது திணிக்கச் சமயம் பார்த்துக் கொண்டிருக்கிறது. சமஷ்டியைத் தூள் தூளாக்க காங்கிரஸ் கச்சைகட்டி நிற்கிறது. சமஷ்டி நமக்கு புதிய உறுதியான அடிமை விலங்குகளை மாட்டப் பார்க்கிறது. ஆகையால் தொழிலாளிகளாகிய நாம் விவசாயப் பாட்டாளி மக்களுடன் ஐக்யப்பட்டு காங்கிரஸ் கொடியின்கீழ் நின்று சமஷ்டியை வன்மையாக எதிர்க்கக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறோம்.

மனித சமூகம் வரவர முரண்பாடுகொண்ட இரண்டு வர்க்கங்களாகப் பிரிந்து செல்லுகின்றது. ஒன்று சுரண்டும் வர்க்கம் மற்றொன்று சுரண்டப்படும் வர்க்கம். ஒன்றோடொன்று சமரசம் செய்துகொள்ள முடியாது. எப்போதும் ஒன்றையொன்று எதிர்த்துப் போராடிக்கொண்டே இருக்கும் கடைசியில் ஓர் கடுமையான சண்டையில் சுரண்டிச் சாப்பிடும் சோம்பேறி வர்க்கம் சுரண்டப்பட்டு வந்த பட்டாளி வர்க்கத்தால் சுட்டுச் சாம்பலாக்கப்படும். பட்டாளிகள் தான் வெற்றிக் கொடி நாட்டுவர் என்று மார்க்ஸினுடைய பொதுவுடைமை அறிக்கை அறிவிக்கிறது. "முதலாளி உலகமே! தொழிலாளர் புரட்சி வருகிறது. ஜாக்கிரதை!" என்றும், "புரட்சியினால் தொழிலாளிகளுக்கு அடிமைச் சங்கிலிகள்தான் நஷ்டமே ஒழிய வேறொன்றுமில்லை. ஆனால் அவர்களுக்குக் கிடைப்பது இந்த உலகம்" என்று கூறுகிறார் மார்க்ஸ்.

"ஒவ்வொரு வேலை நிறுத்தமும் தொழிலாளிகளுடைய அரசியல் பாடம்" என்கிறார் மார்க்ஸ்.

இன்று கான்பூரில் நடப்பது போன்ற வேலை நிறுத்தங்கள் ஜனநாயக மந்திரிகளின் கைகளை பலப்படுத்துகின்றன. ஆனால் முதலாளிகளின் ஆயுதமான அரசாங்கத்தை முதலாளிகளுக்கே விரோதமாக காங்கிரஸ் மந்திரிசபை (மதுரையில்) உபயோகித்திருக்கிறது. பொது மக்கள் கட்டளைப்படி காங்கிரஸ் மந்திரிசபை செய்தது. முதலாளிகளை தங்களுடைய ஆயுதத்தைக் கொண்டே வணங்க வைக்கக் கூடிய பலம் காங்கிரஸுக்கு எங்கிருந்து கிடைத்தது? தொழிலாளிகள், பொது மக்களிடமிருந்துதான். ஆகவே தொழிலாளிகள், விவசாயிகள், பொது மக்கள் பலமே காங்கிரஸின் பலம்.

காங்கிரஸ் கவர்ன்மெண்டார் நமக்கு என்ன செய்யவேண்டும்? ஒரு மாதத்திற்கு குறைந்த பக்ஷச் சம்பளம் 30 ரூபாயாக நிர்ணயிக்கவேண்டும். எழுமணி நேர வேலைவேண்டும். வேலை காயம் வேண்டும். வேலையற்ற (Unemployment) உதவி வேண்டும். வயோதிக (கிழ வயது) Old Age உதவிவேண்டும். வருஷத்தில் 16 நாள் காஷுவல் லீவ், 15 நாள் சிக் லீவ் வேண்டும். வருஷத்தில் ஒரு மாதத்திற்குச் சம்பளத்துடன் லீவ் வேண்டும். கண்ட்ராக்ட் வேலைகளும், பீஸ் வேலைகளும், ஒழியவேண்டும், ஒரு வருஷ உழைப்பிற்கு ஒரு மாதச் சம்பளம் கிராச்சூடியாகக் கொடுக்க வேண்டும். பிராவிடண்ட் பண்டு (Provident Fund) சிஸ்டம் ஏற்படுத்தவேண்டும். வீட்டு வசதிகள் செய்து கொடுக்கவேண்டும். இவைகளே நம்முடைய சாதாரணமான குறைந்தபக்ஷக் கோரிக்கைகள் நம்முடைய மந்திரிசபை அவைகளைச் சட்ட ரீதியாகக் கொண்டு வந்து சட்டம் செய்யவேண்டும், அதற்காக நாம் மந்திரிகளை வற்புறுத்தவேண்டும்.

தோழர்களே! அச்சுத்தொழிலில் சம்பந்தப்பட்டிருக்கிற நீங்கள்தான் நவநாகரீகத்தின் ஊற்றுக்கேணிகள். கலையும் படிப்பும் இல்லாமல் நாகரீகம் ஏது? எழுத்துக்கள் அச்சுப் புத்தகங்கள் பத்திரிகைகள் இல்லாமல் கலையும், படிப்பும் ஏது? ஆகையால் உலக நாகரீகமே உங்கள் கையில் இருக்கிறது. நீங்கள் தான் தொழிலாளர் க்ஷேமத்திற்கான போராட்டத்தில் முன்னணியில் நின்று வழிகாட்டவேண்டியவர்கள். பாட்டாளிகளாகிய தொழிலாளிகளும், விவசாயிகளும், காங்கிரஸ் மந்திரி சபையின் முதுகெலும்பு. உங்கள் பலம் அபாரமானது. அதை நீங்கள் உணர்ந்து காங்கிரஸ் மந்திரி சபை தேர்தல் அறிக்கையில் கொடுத்துள்ள திட்டங்களை சீக்கிரம் காரியத்தில் கொண்டுவரும்படி நாம் மந்திரி சபையை வற்புறுத்த வேண்டும்.

*

ஐரோப்பா முழுமையும் இருண்ட மேகங்களால் சூழ்ந்து வருகின்றன. யுத்த அரக்கன் நர்த்தனம் செய்து வருகிறான். ஜனநாயக ஸ்பெயினை கழுத்தைத் திருகி வருகிறான். ஐரோப்பிய முதலாளி தேசங்கள் ஸ்பெயினைப் பங்கு போட்டுச் சாப்பிட சதியாலோசனை செய்து வருகின்றன.

சீனா இன்று தன்னுடைய புனர் ஜன்மத்திற்கு போராடி வருகிறது. சீனாவில் ஜப்பான் செய்யும் அட்டூழிய அக்கிரமங்களுக்கு எல்லையே கிடையாது. ஒரு பாவமு மறியாத ஆண், பெண், பச்சிளங் குழந்தைகள் இறக்கமின்றி வெடி குண்டுகளுக்கு இரையாக்கப்பட்டு வருகின்றனர். சீனத் தொழிலாள விவசாயப் பாட்டாளி மக்கள் இன்று எதிர்த்துப் போராடும் யுத்தம் ஒரு அகில உலக யுத்தமாகும்.

இரத்தத்தைக் குடித்து தலைகிறு கிறுத்துக் கூத்தாடிவரும் முதலாளித்துவம் உலகம் பூராவும் தொழிலாளிகளுக்கு புதிய அடிமைச் சங்கிலிகளை மாட்டி வரும் இந்தக் காலத்தில் கோடி சூரியப் பிரகாசம் போல் ரஷியா பிரகாசித்து உலகிலுள்ள ஒடுக்கப்பட்டு நசுக்கப்பட்டு சுரண்டப்பட்ட மக்களுக்கெல்லாம் ஒரு ஆறுதலாகவும், ஓர் உணர்ச்சியாகவும், ஓர் தாயகமாகவும் விளங்குகிறது.

ரஷியா ஒன்றுதான் இன்று ஸ்பெயினுக்கு உதவி செய்கிறது ரஷியா ஒன்றுதான் சீனாவுக்கு கை கொடுக்கிறது.

உலகத் தொழிலாளர்களே
ஒன்றுபடுங்கள்!

# சீன செஞ்சேனையின் எட்டாவது பிரிவு

[அனாலூயிஸ்ட்ராங்]

ஷான்ஸியின் வடக்கே யுத்தம் புரிந்து கொண்டிருக்கும் எட்டாவது சைன்யமானது, கம்யூனிஸ்ட்களால் நடத்தப்படுவதாலோ அங்கீகரிக்கப்பட்ட செஞ்சேனை யென்பதாலோ முக்யத்வமடையவில்லை. ஆனால் ஒன்றுக்கொன்று முரண்பட்டு, பல ஆண்டுகளாக போரிட்டுக்கொண்டிருந்த இருசைன்யங்களும் (கம்யூனிஸ்ட்ஸ்-கோமிங்டாங்) ஒன்றாக் கலந்து நின்று எதிரியை பின்னடைய செய்வதால் தான் அது முக்யத்வத்தை யடைகிறது. பிற நாடுகளின் பார்வையாளர்களின் அனுபோகத்தாலும் அச்சேனை எதிரியை முறியடிக்கக் கூடிய வல்லமை பொருந்தியது என்பதாலும் அச்சேனை இன்னும் மற்ற சேனைகளைவிட முக்யத்வத்தை யடைகின்றது. இச்சேனையானது சீனாவின் மற்றச் சேனைகளுக்கு போர் முறை கற்றுக்கொள்ள உதவியாக இருந்து ஜப்பானை துரத்தி யடிக்க வழிகாட்டியாக நிற்கிறது.

இதை, எட்டாவது செஞ்சேனையின் தளகர்த்தர் சூடே (பிரபல கம்யூனிஸ்ட்) "சியாங்கே ஷேக் (கோமிங்டாங் தலைவர்) கவர்ன்மெண்டிடமிருந்து வரும் உத்திரவுபடியும், மார்ஷல் என் ஹிஸானின் உத்திரவு படியும், நான் இந்தசைன்யத்தை நடத்தி செல்கிறேன், மேலும் நாங்கள், ஒழுங்கு முறைக்குக் கட்டுப்பட்டு நடக்கிறோம் என்பதில் பெருமித மகிழ்ச்சி யடைகிறோம்" என்று கூறினார்.

கடந்த பத்து ஆண்டுகளாக சீனா முழுவதிலுமுள்ள கம்யூனிஸ்ட்டுகளை சூரையாடிய சியாங்கே ஷேக்குடன் இன்று கம்யூனிஸ்ட்டுகள் கலந்து நிற்பதற்குரிய காரணம் யாது? "சீனாவின் மத்ய அரசாங்கத்தின் இந்த 'கம்யூனிஸ்ட் சூரையாட்ட'க் கொள்கையில் மாற்றம் ஏற்பட்டதற்கு காரணம் சீனாவின் பொது எதிரியாகிய ஜப்பானின் படையெடுப்பை தடுக்க என அறிக. "1931ம் வருஷத்திலேயே-ஜப்பான் மஞ்சூரியா மீது படையெடுத்த அன்றே, பொது எதிரியாகிய—நாடு பிடிக்கும் வெறி கொண்ட ஜப்பானை எதிர்க்க எந்த அரசாங்கத்தோடும் நாங்கள் ஒத்துழைக்கத்—தயார் என்றோம். ஆனால் சியாங்கே ஷேக் எங்களை நம்பினாரில்லை. அவ்வாறு கூறியது எங்களுக்கு அவரிட மிருந்த வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்ள செய்யும் சூட்சி என சூசகம் செய்தார். அதனால் சியாங்கே ஷேக் ஜப்பானுக்கு எதிரி அல்ல, எங்களுக்கு விரோதமாக ஜப்பானுக்கு உதவி செய்தார் என எண்ணினோம். நாளாக ஆக எங்கள் எண்ணம் மாறி விட்டது. எங்களை ஒழிக்க சியாங்கே ஷேக் கங்கணம் கட்டிக்கொண்டிருந்தாலும், உண்மையாகவே ஜப்பானை எதிர்க்க முயற்சி செய்கிறார் என்பதை உணர்ந்தோம். இதை நாங்கள் அவருடைய வார்த்தைகளிலிருந்து நம்பவில்லை அவர் செய்த சில எதிர்ப்பு முறைகளைக் கொண்டு அவர் ஜப்பானின் எதிரியே என்ற தீர்க்கமான முடிவுக்கு வந்தோம். ஆகையால் ஜப்பானின் எதிரிகளின் ஐக்கிய முன்னணியைத் திரட்டி சியாங்கேஷேக்கை எதிர்க்கவேண்டுமென்ற எண்ணம் மாறி, சியாங்கேஷேக்குடன் ஒன்றுபட்டு ஓர் பலமான ஐக்கிய முன்னணியை சிருஷ்டித்து ஜப்பானை விரட்ட முடிவு கட்டினோம். சியான் சம்பவம் சியாங்கேஷேக், அவரைக் கவிழ்க்க நாங்கள் சூழ்ச்சி செய்கிறோம் என்ற அவநம்பிக்கை அகன்று, சீனாவை ஜப்பானிடமிருந்து காப்பாற்றுவதற்காகவே நாங்களும் வேலை செய்கிறோம் என்பதை உணர உதவி புரிந்தது. அந்நாளிலிருந்து ஒத்துழைப்பு வேலை ஆரம்பமாயிற்று." என எட்டாவது சீன செஞ்சேனையின் அரசியல் அமைச்சர் ஜென் கூறினார்.

அறியாமையாலும், பொறாமையாலும், சரித்திர உண்மைகளைத் தெள்ளத் தெளிய உணராதவர்கள், கம்யூனிஸ்ட்டுகள் தங்களின் வர்க்கப் போராட்டத்தை நழுவ விட்டனர் எனக் கூறுகின்றனர். ஜப்பான் ஏகாதிபத்தியத்தை விரட்டக்கூடிய எந்த சீன அரசாங்கமும், சீனாவிலும், ஜப்பானிலும் புரட்சி எண்ணங்களைப் பரப்ப உதவி புரியும். இந்தக் கொள்கையை எதிர்க்கும் சீனர்கள்விரல்விட்டு எண்ணக்கூடிய ஒரு சில ட்ராக்ஸிஸ்ட்டுகளே. அவர்கள், சியாங்கேஷேக்கை கவிழ்த்து, யுத்தத்தை சீனக் கிராமங்களில் வர்க்கப் போரைப் உபயோகித்துக்கொண்டு, பிறகு ஜப்பானை எதிர்க்க எழவேண்டுமெனக் கூறுகின்றனர். இந்த வர்க்கப் போராட்டத்தின் முறை—வர்க்கப் போராட்டம், ஜப்பான் சைன்யங்களுக்கு உதவி புரிய அனுகூலமாயிருக்கும் என்பது வெளிப்படை.

* * *

இந்த நாட்டின் எட்டாவது செஞ்சேனையின் போர் முனையின் விஸ்தீரணம் பெல்ஜிய நாட்டைப் போன்று இரண்டு மடங்காகும். சிலர் ஜப்பான் பிடித்த பாகங்களைத்தான் எட்டாவது சேனைக்கு சியாங்கே ஷேக் கொடுத்திருக்கிறார் என வதந்தியை கிளப்புகின்றனர். ஆனால் சைன்யத்திலிருக்கும் ஒருவராவது அம்மாதிரி கூறவில்லை. அவர்கள் விரோதிகளை துரத்தியடிப்பதிலும், எதிரிகளின் சைன்யத்தினுள்ளே புகுந்து அவர்களை விரட்டுவதிலும் பெருமையடைகின்றனர்.

வட ஷான்ஸியிலுள்ள ரயில்வேக்கள் ஜப்பானியர்கள் கையில் இருந்து வருகின்றது. இதனால் வட ஷான்ஸி மாகாணமே ஜப்பானியர்கள் வச மிருப்பதாகக் கூறுகின்றனர்.

ஷான்ஸி பிரதேச குடிகள் ஜப்பானியர்களுக்கு அடங்கியவர்களா யிருந்தால் இக் கூற்று உண்மையாக இருக்கலாம். ஆனால் ஷான்ஸியின் ஜனங்கள் ஏகாதிபத்திய வெறியர்களுக்கு அடங்கி இருக்கவில்லை. அவர்கள் எட்டாவது சேனையால் போதிக்கப்பட்டதின் பயனாக விரோதியை விரட்ட முனைந்து முன்னணியில் நிற்கின்றனர். ரயில் ரோடுகளை விட்டு ஒரு மைலுக்குமேல் ஜப்பானியர்கள் ஷான்ஸியினுள் பிரவேசிக்க செய்த முயற்சிகளெல்லாம், எட்டாவது சேனையால் தகர்க்கப்பட்டு விட்டன. ரயில் ரோடுகளைக் கூட ஜப்பானியர்கள் உபயோகிக்க முடியாமற் செய்யப்பட்டு விட்டது.

* * *

இடை இடையே சீன ஜனங்களும் ஆயுதந் தாங்கிய யுத்த வீரர்களும் இஷ்டப்படி இந்த ரயில் ரோடுகளை கடக்கின்றனர். சிற்சில சமயங்களில் ஜப்பானியர்களால் எதிர்க்கப்படுகின்றனர் என்றாலும் அவர்களிஷ்டப்படி போவது மட்டும் குறையவில்லை. இதைத் தடுக்க ஜப்பானியர்கள் செய்த முயற்சிகளெல்லாம் வியர்த்தமாயின. ரயில்வே லயனுக்கு அருகில் வசிக்கும் சீன விவசாயிகளை, சைன்யங்கள் ரயில்வே லயனைக் கடக்கும் பொழுது தங்களுக்குத் தெரிவிக்க வேண்டுமெனவும் அப்படித் தெரிவிக்காவிடில் குடும்பத்தோடு அழிக்கப்படுவர் எனவும் ஜப்பானியர் பயமுறுத்தினர். இந்த எட்டாவது சேனை சீன விவசாயிகளுக்கு எவ்வித துன்பமும் நேராதவாறு திரப்பு இடங்களில் ரயில்வே லயனைக் கடக்கின்றனர்.

* * *

பிற சைன்யங்களைவிட எட்டாவது சேனை மூன்று விதங்களில் வேறுபட்டு இருக்கின்றது. ஒவ்வொரு வீரனும் எதற்காக, எங்கே சண்டை செய்கிறான் என்பது கற்பிக்கப்படுகிறது. ஒவ்வொரு நாளும் அவ்வீரன் ராணுவப் பயிற்சி, கலைப்பயிற்சி, அரசியல் பயிற்சி, முதலியவைகள் கற்பிக்கப்படுகிறான். கலைப் பயிற்சி எழுதுவது, படிப்பது இரண்டையும் தன்னுள் அடக்கி நிற்கிறது. அரசியல் படிப்பு கடுமையான கம்யூனிஸ்ட் கொள்கையை தன்னுள் அடக்கி இருக்கவில்லை. அது மிக சுலபமாக கற்பிக்கப்படுகின்றது. தேசப் பற்று, உயர்ந்த வாழ்க்கை முதலிய கம்யூனிஸத்தின் சில பாகங்களை மட்டும் போதிக்கின்றனர்.

இரண்டாவதாக பிற சைன்யங்களைப்போல் சேனைத் தளகர்த்தனைக் கண்டு எட்டாவது சேனை நடு நடுங்குவதில்லை. சோல்ஜர்கள் ஒருவருக் கொருவர் தோழமை யுணர்ச்சியோடு இருக்கிறார்கள். சூடே சீனப் பொது ஜனங்களாலும், சோல்ஜர்களாலும் போற்றிப் புகழப்படுகிறார்.

லட்சக் கணக்கான ஷான்ஸி விவசாயிகள் தங்களுடைய நாட்டைக் காப்பாற்ற, எட்டாவது சேனையின் உதவி கொண்டு, ஜப்பானியர்களை விரட்டுகின்றனர்.

அந்த விவசாயிகளுக்காகவே அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் வேண்டுகோள் விட வேண்டு மென்றும், எட்டாவது சேனைக்காக எந்த வேண்டுகோளும் தேவையில்லை என்றும் சூடே கூறினார்.

சூடே அந்த விவசாயிகளுக்காக மட்டும் பரிந்து பேசவில்லை. சீனாவெங்கும் ஜப்பானை முறியடிக்க குதித்தெழும் விவசாய வாலண்டியர்களுக்காகவும் பரிந்து பேசினார்.

## கவனிக்கவும்

நமது காரியாலயத்திற்கு எழுதும் கடிதங்கள் பத்திரிகை சம்மந்தப்பட்டதாயிருந்தால் மானேஜருக்கும், பத்திரிகையில் பிரசுரிக்க வேண்டியதாயிருந்தால் ஆசிரியர் என்ற விலாசத்திற்கும், தனி நபர்களுக்கு எழுதும் கடிதங்களாக இருந்தால் அவர்கள் பெயரிட்டும் எழுதவேண்டும்.

# ராஜீயக் கைதிகளுக்கு விமோசனமில்லையா?

**பஞ்சாப் சிறையில்**

1930ம் வருஷம் லாகூர் சதி வழக்கில் ஆயுள்பரியந்தம் தீவாந்திர சிக்ஷை அளிக்கப்பட்ட சர்தார் பகத்சிங்கின் தோழர்கள் B. K. தத்தர், சிவவர்மா, கபூர், கிஷோரிலால், கமலநாத் சின்ஹா, டாக்டர் கிகாம் ஆகியோர் இன்றுவரை விடுவிக்கப்படவில்லை. இவர்களுடைய பேர் போன வீரம் பொருந்திய உண்ணாவிரதத்தினால் தான், இந்த தேசத்தில் ஜெயில் சீர்திருத்தம் முதன் முதலாக ஏற்பட நேரிட்டது. அப்படியிருந்துங்கூட, இந்த தோழர்கள் தண்டனை அடைந்த பின், கொலையாளிகளைப்போல் நடத்தப்பட்டார்கள் அந்தமான் தீவில் தோழர் மஹாவீர் சிங் உண்ணாவிரதத்தினால் மாண்டார்.

8 வருடங்கள் கழிந்தன. இன்னும் அவர்கள் ஜெயிலில் தான் அடை பட்டிருக்கிறார்கள். பிற்போக்கான சிக்கந்தர் ஹையத்கான் சர்க்கார் இந்த தோழர்களை விடுவிக்க மறுக்கிறது. தோழர் கமலநாத் இருமல் நோயால் அவஸ்தைப் படுகிறார். தோழர் தத்தர் சில்லரை வியாதிகளால் பீடிக்கப்பட்டு அவஸ்தைப் படுகிறார்.

காந்திஜீயும், காங்கிரஸ் காரியக் கமிட்டியும் வேண்டிக்கொண்டதற்கிணங்கி, இந்த தோழர்கள் அவர்களது உண்ணாவிரதத்தை நிறுத்திவிட்டனர். பஞ்சாபில் காங்கிரஸ் மந்திரி சபை இல்லையே என்று கூற முற்படுவது சரியான காரணமல்ல. ஜனங்களுடைய விருப்பத்தின்படி மேற்படி தோழர்களை விடுதலை செய்யாதிருக்கும் பஞ்சாப் சர்க்காருக்கு எதிராக தேசம் முழுதும் கிளர்ச்சி செய்து, ஜெயிலில் கிடந்து வாடும் தோழர்களை பஞ்சாப் சர்க்கார் உடனே விடுதலை செய்யும்படி செய்யவேண்டியதைத் தவிர வேறு வழியில்லை.

கார்வாலி வீரர்களில் ஒருவரான சாந்தா சிங், ஐக்கிய மாகாணத்திலுள்ள நைனி ஜெயிலில் இருக்கிறார். இந்தியா சட்ட சபையில் பாண்டே என்பவர் "சாந்தா சிங்கை ஏன் இன்னும் சர்க்கார் விடுதலை செய்யவில்லை" என்று கேட்டதற்கு, ஹோம் மெம்பர், "அவர் இந்த பிரிட்டிஷ் சர்க்காரை அடியோடு கவிழ்க்க சேனை வீரர்கள் செய்த புரட்சியில் முக்கியஸ்தர்; அவர் ஓர் அரசியல் கைதியல்ல" என்று அசட்டுத்தனமான பதிலளித்தாராம்.

ஆனால் ஜனங்கள் இந்த வியாக்கியானத்தை ஏற்றுக்கொள்ளப் போகிறார்களா? பொதுமக்களை சுட்டுத் தள்ளும்படி மேல் அதிகாரி உத்தரவிட்டபோது, சுடமாட்டேன் என்று கூறிய சாந்தா சிங்கையும் கார்வாலி சிப்பாய்களையும் நாம் மறந்துவிடலாமா? ஏகாதிபத்ய சிறையில் சாந்தா சிங் ஏன் இன்னும் இருந்துவர வேண்டும்?

ஐக்கிய மாகாண சர்க்காரும், எல்லைப்புற சர்க்காரும் சந்தா சிங்கை உடனே விடுவிக்க ஆவன செய்வார்களாக. பொதுமக்கள் கோரிக்கையும் இதுவே.

சாந்தா சிங் இன்னும் ஜெயிலில் இருப்பதின் காரணம் என்ன தெரியுமா? பட்டாளத்தில் ஓர் பிரிவிற்கு தளகர்த்தராயிருந்தார். இவரே ஏகாதிபத்யத்தின் உத்தரவிற்கு இணங்கவில்லை. இது ஓர் பெரிய குற்றமல்லவா என்பதே ஏகாதிபத்யத்தின் கண்களுக்கு முன் நிற்கின்றது.

இந்த காரணத்திற்காகவே தான் முக்கியமாக நாம் அவரை உடனே விடுவிக்க வேண்டுமென்று கோருவது.

இந்த விஷயத்தில் காங்கிரஸ் முக்கிய கவனம் செலுத்தவேண்டும். இந்த வீரரை உடனே விடுதலை செய்ய வேண்டுமென்று தேசமெங்கும் ஆர்ப்பாட்டங்கள் நடைபெற வேண்டும்.

**சென்னை சர்க்கார் கவனிக்குமா?**

சென்னை மாகாணத்தைச் சேர்ந்த இரு ராஜீயக் கைதிகள் ஐக்கிய மாகாண ஜெயிலில் இருப்பதாகவும், அவர்களை சென்னை மாகாண ஜெயிலுக்கே அனுப்பிவிடலாமா அல்லது விடுதலை சம்பந்தமாக என்ன செய்வது என்பது பற்றி ஐக்கிய மாகாண சர்க்கார் சென்னை சர்க்காருக்கு விபரத்தை தெரிவித்திருந்தார்களாம். இதற்கு சென்னை சர்க்காரிடமிருந்து ஐ. மா. சர்க்காருக்கு இன்றுவரை எவ்வித தகவலும் கிடைக்கவில்லையாம்.

**வங்காளம்**

வங்காள மாகாண மாணவர் சம்மேளனத்தின் உப தலைவரும், மாணவர்களின் தலைவர்களில் முக்கியஸ்தரான தோழர் பிரோமேத் சென், ராஜத்துவேஷ குற்றத்திற்காக தண்டிக்கப்பட்டிருக்கிறார்.

அவரை கைது செய்த தினத்தன்று, கல்கத்தாவிலுள்ள சகல கல்லூரி கமிட்டிகளிலும், சர்க்கார் கைது செய்ததை கண்டித்து தீர்மானங்கள் நிறைவேறியிருக்கின்றன. அன்றைய தினமே 1500 மாணவர்கள் வித்யாசாகர் கல்லூரியில் கூட்டம் கூடி, புரோமேத் சென்னை உடனே விடுவிக்க கோரினார்கள். "உடனே புரோமேத் சென்னை விடுதலை செய்" என்ற சுலோகத்தோடு, கல்கத்தா நகரமெங்கும் ஊர்வலங்கள் நடந்தன. ஆயிரக் கணக்கான மக்களடங்கிய பெரிய கூட்டங்கள், கோமில்லா, பெரட்பூர், சிட்டகாங்கிலும் மற்றும் சில இடங்களிலும் நடந்தன. பிரோமேத் சென்னை கைது செய்து தண்டித்தது, மாணவர் இயக்கத்தையே சர்க்கார் தாக்குவதாக இருக்கிறபடியால், உடனே பிரோமேத் சென்னை விடுவிக்கக் கோரி, தீர்மானங்கள் மேற்படி கூட்டங்களில் ஏகமனதாக நிறைவேறியிருக்கின்றன.

வங்காள சர்க்காரின் இந்த நடத்தையை, வங்காள மாகாண காங்கிரஸ் கமிட்டி, மாகாண டிரேட் யூனியன் காங்கிரஸ், மாகாண கிருஷிகர் சபைகளும் வன்மையாகக் கண்டித்தும் சென்னின் விடுதலையைக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றியிருக்கின்றன.

சென் தண்டிக்கப்பட்ட செய்தியை கேள்விப்பட்ட கேம்பிரிட்ஜ் மாணவர்கள், தண்டிக்கப்பட்டதை கண்டித்தும், விடுதலையைக் கோரியும் ஊர்வலங்களை நடத்தினார்கள். நியூ ஹாம் மற்றும் சில கல்லூரி ஆங்கிலேய சீன, இந்திய மாணவிகள் சென்னை விடுவிக்க நடத்தும் போராட்டத்திற்கு பாதுகாப்பு கமிட்டி பேரால் பண வசூல் செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள்.

வங்காள மாணவர்களும் தோழர் சென்னை விடுவிக்க போராடுவார்களாக.

**காந்திஜி பதிலளிக்கவேண்டும்**

அரசியல் கைதிகள், பந்தோபஸ்துக் கைதிகள் விடுதலை சம்பந்தமாக ஏப்ரலில் வங்காள சர்க்காருடன் நடத்திய சம்பாஷணைக்குப் பின் காந்திஜி வங்காளத்தைவிட்டுச் செல்லும் போது "பேச்சு வார்த்தைகள் நடந்து கொண்டிருக்கும்போது, தொழிலாளர்களும் பொது மக்களும் எந்தவித ஊர்வலங்களும், கூட்டங்களும்" இது சம்பந்தமாக நடத்தக்கூடாது என்று வற்புறுத்தி கூறியிருந்தார்.

2 மாதங்கள் சென்றன. காந்திஜி அபிப்பிராயப்படி கூட்டங்களும் ஊர்வலங்களும் நிறுத்தப்பட்டன. பேச்சு வார்த்தை முடிவு ஒன்றும் இதுவரை தெரியவில்லை.

இதற்கிடையில் ஆயிரத்திற்கு மேற்பட்ட பந்தோபஸ்துக் கைதிகளின்—அரசியல் கைதிகளின் சுதந்திரம் தொடர்ந்தாற் போல் பறிக்கப்பட்டே வருகிறது.

இந்த தேச பக்தர்களை விடுவிக்க என்ன காரியங்கள் நடந்து வருகின்றன என்பதை கேட்க மக்களுக்கு உரிமை உண்டு. பிற்போக்கான வங்காள சர்க்கார் வழிக்கு வர, "பொது மக்களின் நிர்பந்தம்" என்ற ஆயுதம் மக்களிடம் இருக்கிறது. ஆனால் மக்களின் 'தலைவரே' இதற்கு ஓர் தற்காலிக தடை போட்டிருக்கிறார்.

இந்த விஷயத்திற்கு காந்திஜி திடமான பதிலளிக்க வேண்டும். எவ்வளவு காலத்திற்குத் தான் பொருத்திருப்பது? எவ்வளவு காலம்தான் கிளர்ச்சி செய்யாது அடங்கி ஒடுங்கி கிடப்பது?

"உடனே அரசியல் கைதிகளை—பந்தோபஸ்துக் கைதிகளை ஹக் மந்திரி சபை விடுவிக்க வேண்டுமென்று எந்தவித பதிலும் வராவிட்டால், பிரமாண்டமான ஊர்வலங்கள், கிளர்ச்சிகள் கூட்டங்கள் நடைபெறும்.

இது அகில இந்திய பிரச்னையாகும். வங்காள பந்தோபஸ்துக் கைதிகள் விடுதலையாகாதிருப்பதைக் குறித்து தேசம் முழுதும் ஓர் குறிப்பிட்ட தினத்தில் எதிர்ப்பை தெரிவிக்க, தேசிய காங்கிரஸ் தலைவர் ஓர் வேண்டுகோளை விடுவிக்கவேண்டும்.

இனி வியர்த்தமான பேச்சு வார்த்தைகள் வேண்டாம்! பொது மக்கள் ஆர்ப்பாட்டங்கள் முன்னுக்கு வரட்டும்.

**கோவை ஜில்லா மகாநாடுகள்**

ஜூன் மாதத்தில் கோவை ஜில்லா, வாலிபர், தொழிலாளர், சோஷியலிஸ்ட் கட்சி மகாநாடுகள் நடைபெறும்.

மகாநாட்டுக் காரியாலயம்
மால்மில் ரோடு,
கோயமுத்தூர்.

# கான்பூர் தொழி

சென்ற ஒன்பது மாத காலத்திற்குள் இரண்டாம் முறையாக கான்பூர் மில்களில் பொதுவேலை நிறுத்தம் ஏற்பட்டுள்ளது. தூரத்திலிருந்து மேலெழுந்தவாரியாய்ப் பார்ப்போர், இது காங்கிரஸ் அரசாங்கம் ஏற்பட்டதின் காரணமென்றும், காங்கிரசினர் எலெக்ஷன் காலத்தில் அசாத்தியகரமான வாக்குறுதிகளைக் கொடுத்த காரணமென்றும்; மற்றும் சிலர், இது 'காலிகள்', கம்யூனிஸ்டுகள் முதலியோரின் 'திருவிளையாட்டு' என்றும் கூறுகின்றனர். நான் இதைப்பற்றி யாதும் கூறும் முன் சென்ற ஆகஸ்டு மாதம் 'வட இந்திய முதலாளிகள் சங்க'த்தின் இத்தகைய பிதற்றல்களுக்கு, ஐக்கிய மாகாணத்து பிரதம மந்திரியார் கனம் வல்லப பந்தும், கான்பூர் நகரக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீஜத் பாலகிருஷ்ண சர்மாவும் அளித்த பதிலைக் குறிப்பிட விரும்புகின்றேன்.

கனம் பந்த் தனது பத்திரிகை ஸ்டேட்மெண்டில் பின்வருமாறு குறிப்பிடுகின்றார் :—

"..........(சிலர்) வேலை நிறுத்தம் இம்மாகாணத்தில் காங்கிரசினர் பதவி ஏற்றதினால் ஏற்பட்டதென்று குற்றம் சாற்றுகின்றனர். ஆனால் நாங்கள் பதவிகள் ஒப்புக்கொள்ளுவதற்கு முன் பல மாதங்கள் இடையறாத வேலை நிறுத்தங்கள் ஏற்பட்டு வந்ததை யாரும் மறுக்க முடியாது. அதிலும் சென்ற இடைக்கால மந்திரி சபை சமயம் 'அப்பர் இந்தியா சேம்பர் ஆப் காமர்ஸி'ன் பிரதிநிதி தொழில் மந்திரியாயிருக்கையில் பல மில்களில் பல தடவை வேலை நிறுத்தம் ஏற்பட்டது குறிப்பிடத்தக்கது........"

ஸ்ரீஜத் பாலகிருஷ்ண சர்மா தனது மறுமொழியில் கீழ்வருமாறு குறிப்பிடுகின்றார் :—

".........(வட இந்திய முதலாளிகள் சங்கத்து) சேர்மன் சர். டி. ஸி. ஜோன்ஸ், காங்கிரஸ் அரசாங்கமே, பெருமிதமாய்ப் பரவிவரும் வேலை நிறுத்த நோய்களுக்குக் காரணமென்றும், வேலை நிறுத்தங்கள் தேசீய நோக்கங்களுடன் ஏற்படுத்தப்படுகின்ற" தென்றும் புகலுகின்றார்..............1936 செப்டம்பர் முதல் கான்பூர் மில்களில் வேலை நிறுத்தம் ஏறக்குறைய தொடர்ந்து ஏற்பட்டு வருகின்றது. கான்பூர் கலெக்டர் மிஸ்டர் 'ஓவனை'க் கேட்டால், அவர் வேலை ஒப்புக்கொண்ட தினம் முதல் இன்றுவரை தொடர்ந்து எந்த ஒரு மாதமும் ஊர்வலங்களின்மீது தடை ஏற்படாது செல்லவில்லை என்ற உண்மையை அறியலாம். சமீப காலத்தில், காங்கிரசினர் அதிகாரம் ஒப்புக்கொள்ளுமுன் சுமார் பதினொன்று வேலை நிறுத்தங்கள் ஏற்பட்டுள்ளன......"

ஆகவே வேலை நிறுத்தங்களின் காரணம் நமது காங்கிரஸ் பதவி ஏற்றதாலல்ல என்றும், அதற்கு வேறு பற்பல காரணங்கள் உண்டென்பதும் வெளிப்படை.

வேலை நிறுத்தம், காங்கிரஸ் அரசாங்கத்தை வீழ்த்துவதற்காக சோஷியலிஸ்டுகள் செய்யும் சூழ்ச்சி என்று அர்த்தமற்று கூறும் நண்பர்கள் இதை சிறிது ஊர்ந்து கவனிக்கவேண்டுகின்றேன். மேலும் இந்தியாவில் இதுவரை ஏற்பட்ட பொது வேலை நிறுத்தங்களில் பெரியதெனச் சொல்லப்படும் சமீபத்திலேற்பட்ட வங்காள ஜூட் மில் வேலை நிறுத்தத்தை வாசகர்கள் மறந்திருக்க மாட்டார்கள். வங்காள அரசாங்கம் யார் கைகளில் இருக்கின்றதென்பது யாவரும் அறிவர். ஆகவே இத்தூற்றுதலில் யாதொரு பொருளுமில்லை என்பதை நாம் சொல்லத் தேவையில்லை. ஆனால் ஒன்றுமட்டும் நிச்சயம். நமது காங்கிரஸ், ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்தை நடத்தும் ஓர் பெரிய சபை. மக்களின் இத்தகைய பொருளாதாரப் போராட்டம் காங்கிரசைப் பலப்படுத்தி அதன் வேலையில் பெரும் உதவி யளிக்கின்றது. இக்காரணமாய் காங்கிரஸ் மந்திரிமார்கள், மற்ற தேசத்துரோக மந்திரிகளைப்போல் மக்களின் போராட்டங்களை நசுக்கிவிடாவண்ணம், அதை மேன்மேலும் உயர்த்தி, வளர்த்து, பலப்படுத்தக் கடமைப்பட்டுள்ளனர். இதனால் நாடெங்கும், காங்கிரஸ் பதவியைக் கைப்பற்றிய வுடன், மக்களின் போராட்டம் சுதந்திரமாய் வளருவதைக் காண்கின்றோம். இவ்வியக்கங்களிலேயே காங்கிரஸின் பலமிருக்கின்றது. எவ்வளவுக் கெவ்வளவு இது வலிமை யடைகின்றதோ அவ்வளவுக்கவ்வளவு காங்கிரஸும் ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்தில் வலிமை பெறும். இதற்கு நமது சென்ற பத்து மாதச் சரிதையே சாட்சி.

நிற்க, திரு. ராஜேந்திர பிரசாத் அவர்களைத் தலைமை கொண்ட கான்பூர் தொழிலாளர் விசாரணைக் கமிட்டிக் கூறுகின்றபடி. "1929-37க்குள் கான்பூர் துணி நெசவு மிகவும் அதிகப்பட்டிருக்கின்றது". "ஐக்கிய மாகாணத்து தொழிற்சாலைகளில் 1928-29ல் 603, 283, 27 பவு

## பாஸிஸம் ஒழிக! பாசி



கான்பூர் தொழிலாளர்களின் போராட்டத்தில், ப
பாஸிஸ்ட்—எதிர்ப்பு '

# ழிலாளர் இயக்கம

ண்டு நூல் நூர்சப்பட்டது. ஆனுல் 1936-37ல் 115,000,739 பவுண்டு நூல் நூர்கப்பட்டுள்ளது. அதாவது சுமார் 90% அதிகமாயுள்ளது. 1929ல் 167,164 பேல் பருத்தியும், 1937ல் 312,484 பேல் பருத்தியும் உபயோகிக்கப் பட்டுள்ளது". இம் மாகாணத்தில் கான்பூர் தான் முக்கியமான தொழிற்சாலை நகரமாகும். இந் நகரில் மட்டும், "1929ல் 135,524 பேல் பருத்தியும், 1937ல் 244,340 பேல் பருத்தியும் உபயோகிக்கப்பட்டது. இங்ஙனம் உலகமெங்கும் பொருளாதார நெருக்கடியில் அவதியுற்ற காலத்திலும் இந்நகரத்து தொழிற்சாலை முன்னேற்றமடைந்து கொண்டிருந்தது. மற்றும் 1937-38ல் பருத்தி விலையில் ஏற்பட்ட மாறுதல்களால் கான்பூர் தொழிற்சாலை மிகவும் அதிகம் லாபம் கொண்டது" ஆனுல் இந்த எட்டு வருடங்களில் தொழிலாளர்களின் நிலைமையோ மிகவும் போசமாகிக் கொண்டே வந்தது. ஏற்கனவே 'ராயல் கமிஷன்' ரிப்போர்ட் கூறுகின்றபடி கான்பூர் தொழிலாளர்களின் சம்பளம், இந்தியாவில் மற்றைய தொழிற் சாலை செண்டர்களில் வேலை செய்யும் தொழிலாளர் சம்பளத்தைவிட மிகவும் குறைவு பம்பாய் முதலிய இடங்களில் தொழிலாளர்கள் தங்கள் சங்கங்களின் பலத்தால், சம்பளத்தை முதலாளிகள் நினைத்தபடி குறைக்க முடியா வண்ணம் சண்டை செய்து தடுத்துவந்த காலையில், கான்பூர் தொழிலாளர்கள் ஒற்றுமையற்று, தங்கள் உரிமைக்காகப் போராடும் வலிமையான சங்கமற்றிருந்ததால்—கான்பூர் மஸ்தூர் சபாவில் சென்ற ஆகஸ்டு வேலை நிறுத்தத்திற்கு முன் வரை மிகவும் சிறுபான்மையோரே மெம்பராயிருந்தனர். மற்றும் சமீப காலம் வரை அச்சபை மிதவாதிகளின் தலைமையிலேயே இருந்துவந்தது—கான்பூர் மில் முதலாளிகள் தங்களிஷ்டப்படி மேன்மேலும் தொழிலாளர்களின் சம்பளத்தைக் குறைத்தனர்; வேலையை அதிகப்படுத்தினர். பம்பாய் முதலிய இடங்களில் மக்கள் தங்கள் போராட்டத்தின்மூலம் அடைந்த சாதாரண சவுகர்யங்களும் இவர்களுக்குக் கிடையாது. இங்ஙனம் நாளுக்கு நாள் தொழிலாளர்களின் நிலைமை க்ஷீணித்து வருகையில் மக்கள் எத்துணை நாள் தான் பொருத்திருப்பர். முக்கியமாய் 1933-க்குப் பின் உணவுப்

தி...
தடை...
பட்ட மில்க...
தங்கள் ஏற்...
யம் தொ...
யும் கொ...
இன்றை...
தொடர்...
'கூப்பர் அ...
ஏற்பட்ட ...
னின்று ...
உண்மையில்...
சம்பள உ...
மிகவும் தீவி...
துடனும்,
ஆரம்பித்த இ...
ஜூனில் 'விக்...
ஏற்பட்ட...
போராட்டத்...
ள்ளவேண்டு...
மில்லில், ம...
களைக் குறை...
வந்தனர்.
ஜூன்-ஜூலை...
போராடிய...
சம்பளத்...
ன்ற வா...
பேரில் ...
டது.



ில், பக்கபலமாக நிற்கும் காங்கிரஸ் தொண்டர் படை
ப்பு 'ஸல்யூட்' செய்யும் காட்சி

...ஜூலை...
திரி சபை காலத்தில் நடந்த...
என்பது குறிப்பிடத்தக்க...
இதற்கு மூன்று அல்லது
நான்கு தினங்களுக்குள்
ஜே. கே. ஜூட்மில் தொழிலாளர்கள் வேலையை விட்டு வெளியேறினர். அவர்களின் முக்கிய டிமாண்டு "சம்பளம் 1933ல் நிலைமைக்கு உயர்த்த வேண்டும்" என்பதாகும். இந்த வேலை நிறுத்தம் நடந்து வருகையில் காங்கிரஸ் பதவியை ஏற்றுக்கொண்டது உடனே பிரதான மந்திரி கனம் பந்த் கான்பூர் சென்று இச்சண்டையைத் தீர்த்து வைத்தார். அதன்படி மில் முதலாளி, மக்களின் சம்பளத்தை 1937 ஜனவ...
ரியிலிருந்த நிலைமைக்கு உயர்த்து...
வதாய் ஒப்புக் கொண்டார்கள்...
அப்பால் ஒரு மில்லை விட்டு ம...
றொரு மில்லில் தொடர்ச்சியா...
வேலை நிறுத்தம் ஏற்பட்...
பின் சமாதானத்துடன் மு...
துமாய் இருந்தது. ஜூலை ...
30ந் தேதி மஜ்தூர் சபை ...
ட்ரி தோழர் யூசுப், தொ...
ளர்களின் அவசரக் கோரி...
களை வெளியிட்டார். ...
முக்கிய மானது. "தொ...
சங்க அங்கீகாரமும், ...
ளர்களுக்கு தொழி...
மில் கமிட்டிகள் ...
சுதந்திரமும் ...
உயர்வு சம்ப...
ணைக் கமிட்...
டுமென...
ருந்த...
மில்...
கொ...
மை...

## ...ழிலாளர் இயக்கம்

...வினர்.
...ஸட் 5ந்
...மூன்று மில்களில்
...ம் ஏற்பட்டு விட்
...சாலே மந்திரி,
..., கான்பூர் விஜ
...லமையைச் சமா
...ர். தொழிலா
...ள் மேற்கண்ட
...அவர் முன்னல்
...அவரும் அது
... ஒப்புக் கொண்
...தலாளிச் சங்கத்
... நிறுத்தம் சில
... ஏற்பாடு" என்
...பூர் மஜ்தூர்
...ழிலாளர்களின்
...நிதி சபை அல்ல"
... "அதை அங்கீ
... என்றும் கூறி

...முதலாளிகளின்
...வாதத்தால் சம
...ரியவே, மந்திரி
...திரும்பிச் சென்
...ணமாய் 6-ம்
...ல்களில் வேலே
...டது. செக்
...ம் தாண்ட...

பபட்டனர். சுமார் ஒன்பது மாதத்திற்குப் பின் இன்றுவரையும் ஒப்பந்தப்படி சம்பளப் போர்டுகள், மில்களில் தொங்கவிடப்படவில்லே. சம்பளக் கார்டு வேலே செய்வோர்களுக்குக் கொடுக்கப்படவில்லே. உடன் படிக்கைக்கு நேர் விரோதமாய், விசாரணைக் கமிட்டி தனது ரிப்போர்ட்டை முடிக்குமுன், பல மில்களில் சம்பள விகிதங்கள் குறைக்கப்பட்டன, மஜ்தூர் சபாவிற்கு யாதொரு தகவலுமன்னியில் பெரும்பாலான தொழிலாளர்களே பாதிக்கக் கூடிய சட்டங்களியற்றினர். தொழிலாளர் சங்கங்கள், மில் கமிட்டிகளில் முன்னிருந்து வேலேசெய்து வந்த தொழிலாளர்கள் அனைவரும் தயை தாட்சண்ய மின்றி அர்த்தமற்ற சாக்குப் போக்குகள் சொல்லி வேலேயிலிருந்து நீக்கப்பட்டனர். இந்த சுமார் ஒன்பதுமாதத்திற்குள் இங்ஙனம் சுமார் 500 முதல் 600 தொழிலாளர்கள் மில்களுக்கு வெளியே வேலேயற்று விரட்டப்பட்டனர். இங்ஙனம் ஓர்புறம் முதலாளிகள் உடன்படிக்கைகளே முறி...

மதப்பித்தர்களின் நோக்கம் பலிக்கவில்லே. சென்ற பிப்ரவரியில் ஐக்கிய மாகாண அரசாங்கத்தின் மந்திரிகளில் ஒருவரான திரு. இப்ராஹீம் கான்பூர் விஜயம் செய்த சமயம் ஏற்பட்ட சம்பவம் வாசகர்கள் மறந்திருக்க மாட்டார்கள். இங்ஙனம் கடைசி முறையாக முயற்சிக்கப்பட்ட ஹிந்து-முஸ்லீம் சண்டையும் அதிகம் பரவவில்லே. முஸ்லீம் தொழிலாளர்கள் இதை எதிர்த்துக் கிளம்பினர். ஹிந்து-முஸ்லீம் தொழிலாளர்களிருவரும் ஒன்று சேர்ந்து இரவும் பகலும் தங்கள் தங்கள் வசிக்கும் இடங்களில் பாராக் காத்தனர். மத வெறியர்களால் பரப்பப்பட்டபொய் வதந்திகளேத்தகர்த்தெறிந்தனர். ஏனெனில் இம் மதச் சண்டையால் தங்கள் உண்மைப் போராட்டத்திற்கு, பொருளாதாரப் போராட்டத்திற்குக் கேடு விளையும் என்றும், அதனுல் பாதிக்கப்படுவோர் தோழிலாளர்களே என்ற உண்மையை அவர்கள் உணர்ந்தனர். அத்துடன் ஏகாதிபத்திய அரசாங்கம் செக்...

வில்லே இவ்வெட்டு மாதங்களுக்குள் முதலாளிகள், தொழிலாளர்கள் போராட்டத்தை நாசப்படுத்தும் எண்ணத்துடன் செய்த அநீதங்கள், அக்கிரமங்கள் தொழிலாளர்களின் கோபத்தை மூட்டியது மற்ருேர் புறம் ரிப்போர்ட் வெளியானவுடன், காங்கிரஸ் சர்க்கார் முதலாளிகளேயும், தொழிலாளர்களேயும் அதன் சம்பந்தமாய் தங்கள் தங்கள் அபிப்பிராயங்களேத் தெரிவிக்கும்படி கேட்ட பொழுது, பின்னேயோர், தங்கள் கோரிக்கைகள் முழுவதும் இவ் ரிப்போர்ட்டினுல் நிறைவேறுவிடினும் அதை ஒப்புக்கொள்ள வாக்குக் கொடுத்தனர். ஆனுல் முன்னேயோர் அதை கிஞ்சித்தும் ஒப்புக்கொள்ள மறுத்ததுடன், திரு ராஜேந்திர பிரசாத்தைப் போன்ற அறிஞர் தலேமையில் நடந்த கமிட்டியை இவ் விஷயத்தைப் பற்றி விசாரிக்க, 'யோக்யதை யற்ற' கமிட்டி எனக்குற்றமும் சாட்டினர்.

மேமாதம் 14-ம்தேதி வெளியிடப்பட்ட முதலாளிகளின் இந்த அறிக்கை தொழிலாளர்களுக்கு எரியும் நெருப்பில் எண்ணே வார்த்தது போலாகி... 15-ம் தேதி மாலே நாற்...

... 14-ம ...
மாடின. பலர் கைது செய்யப்பட்டனர். போலீஸார் தடியடிப் பிரயோகமும், துப்பாக்கிப் பிரயோகமும் செய்தனர். அதனுல் பலர் மிகவும் காயமடைந்து ஆஸ்பத்திரிக்கு அனுப்பப் பட்டனர். மற்றைய நாள் மீத மிருந்த மூன்று மில்களும் மூடப்பட்டன. இதற்குப் பின்தான் மில் முதலாளிகளுக்கு புத்தி ஏற்பட்டது. மஜ்தூர் சபாவின் சக்தியை உணர்ந்தனர். 8-ம்தேதி மாலே பிரதம மந்திரி கனம் பந்த் கான்பூர் வந்து தொழிலாளர் தலேவர்கள், காங்கிரஸினர், மற்றும் முதலாளிகளுடன் இரவு முழுவதும் காலே 4 மணிவரைக் கலந்து பேசியதின் பயனுய் ஓர் ஒப்பந்தம் ஏற்பட முடிந்தது.

இவ்வுடன் படிக்கையை மில் முதலாளிகள் ஒப்புக்கொள்ள விரும்பாவிடினும், தோழிலாளர்கள் தங்கள் போராட்டத்தின் மூலம், தங்கள் சக்தியின் மூலம், காங்கிரஸ் ஒத்துழைப்பின் மூலம் இச் க்ஷரத்துக்களே ஒப்புக்கோள்ளும்படி செய்தனர். ஆனுல்
...டன்படிக்கையில் கையெழுத்
...ட்ட க்ஷணம்முதல், முதலாளி
...வ்வொப்பந்தத்தை முறித்
...ந்தனர். அதனின்றும்
...னும் தப்பித்துக்
...யற்சித்தனர். இத
...ழிலாளர்களுக்குக்
...ன்னஞ்சிறு சவு
...ங்கப்பட்டன.
...றுக்கத்தில்
...லாளர்கள்
...ள மறுக்

கதனைத, அவர்களின் ஒ...றுமையைக் குலேத்தெறிய பல வகையிலும் பிரயத்னம் செய்தனர்.

அத்துடன் மதவெறி கொண்டோர் — முஸ்லீம் லீக், இந்தியாதி மில்லத் சபையினர் தொழிலாளர்களிடையே மதத் துவேஷத்தை யுண்டாக்கி, அவர்களின் சக்தியைச் விதைக்கவும் முயற்சித்தனர். இவர்கள், மஜ்தூர் சபா, "ஓர் ஹிந்து வர்க்கத்தினரின் சபை" என்றும் ஹிந்துக்களின் சபை"யான காங்கிரஸுடன் சேர்ந்து வேலே செய்கின்றன ரென்றும், "முஸ்லீம் தொழிலாளர்கள், ஓர் முஸ்லீம் மஜ்தூர் சபா நிருவ வேண்டும்" என்றும் பற்பல விதமாய்ப் பிரசாரம் செய்தனர். இப்பிரசாரத்தின் காரணமாய் ஒவ்வொரு நாளும், முக்கியமாய் டிசம்பர்—ஜனவரி மாதத்தில் ஒவ்வொரு விநாடியும் ஹிந்து—முஸ்லீம் சண்டை எற்பட்டு விடுமோ என்று மக்கள் திகிலடைந்தனர். ஆனுல் காங்கிரஸினர் முக்யமாய் கான்பூர் நகர் காங்கிரஸ் கமிட்டித்தலேவர் திரு. பால கிருஷ்ண சர்மாவும் கம்யூனிஸ்டுகளும் இரவும், பகலும் இடையருது உழைத்த உழைப்பாலும், தொழிலாளர்கள் தங்கள் போராட்டத்தின் தன்மையையும், நோக்கத்தையும் (இங்கு முன்னின்று மும்மரமாய் வேலே செய்யும் தொழிலாளர்களில் பெரும்பாலோர் முஸ்லீம் வகுப்பைச் சார்ந்தோர் என்பது குறிப்பிடத் தக்கது) நன்கு அறிந்தார்களாதலாலும்

...அவசரமான
...தொழிலாளர்
கனை... ...தும், அவர்
களே... ...தடுத்
தும்... ...ச் சண்
டை... ...லாளர்
ஒற்... ...போது
மான ஆதரவும் அ...தனர். இங்ஙனம் தொழிலாளர்கள் எல்லாப் பக்கங்களினின்றும் நசுக்கப்பட்டனர். அவர்களின் தலேவர்கள் கைது செய்யப்பட்டனர். வேலேகளினின்றும் நீக்கப்பட்டனர். மற்றும் பற்பல விதத்திலும் பயமுறுத்தப்பட்டனர்.

இஃதோர் புறமிருக்க, மற்ருேர் பக்கம் திரு. ராஜேந்திரப் பிரசாத் அவர்களின் தலேமையில் நியமிக்கப்பட்ட தொழிலாளர் விசாரணைக் கமிட்டி தனது வேலேயைத் தொடங்கியது. ஆகஸ்டில் ஏற்பட்ட ஒப்பந்தப்படி இக்கமிட்டி தனது ரிப்போர்ட்டை இரண்டு மாதத்திற்குள் வெளியிடவேண்டும். ஆனுல் மில் முதலாளிகள், கமிட்டியுன் ஒத்துழைப்பதற்கு பதிலாய் அதை வேலே செய்ய முடியாதவாறு தடுக்கக் கூடுமான பிரயத்னங்கள் செய்தனர். கமிட்டிக்கு வேண்டுமான சாதனங்கள், மில் நிலேமை சம்பந்தமான விவரங்கள் கொடுக்க மறுத்தனர். கமிட்டியின் அறிக்கை குறிப்பிடும் வண்ணம் இவர்களின் அசட்டுத்தனமான காரியங்களால் மாதம் எட்டிற்குமுன் ரிப்போர்ட் வெளியாக முடிய

எதி...
சயப்படுத்...
பபரட் மைதான...
கூடினர். தொழிலாள...
கள், காங்கிரஸ் தலேவர்க...
இது சமயம் வேலே நிறுத்தத்தின் அவசியத்தை உணர்ந்தார்கள் எனினும், சில நாள் தாமதிக்கும்படி தொழிலாளர்களே வேண்டினர். ஆனுல் இச் 'சிலநாள்' ஒன்பது மாத காலமாய்க் கூறப்பட்டு வந்தது. முதலாளிகள் ஓர்புறம் கமிட்டி ரிப்போர்ட்டை குப்பைத் தொட்டியில் ஓர் கையால் எறிந்து விட்டு, மற்ருேர் கையால் அதே நாள் சுமார் நூறு தொழிலாளர்களே வேலேயிலிருந்து நீக்க ஆர்டர் கொடுத்தனர். இன்னும் சிலநாள் பொருப்பதென்றுல், இதுவரை தப்பித்திருக்கும் உற்சாகம் கொண்டுழைக்கும் தொழிலாளர்களேயும் வேலேயிலிருந்து வெளியே தள்ளி, தொழிலாளர் போராட்டத்தை முற்றிலும் நசுக்கி விடுவதேன்ற அர்த்தமாகும். ஆகவே தொழிலாளர்கள் மறுநாள் ஒன்பது மணிக்கு எல்லா மில்களிலும் வேலே நிறுத்தம் செய்துதான் தீரவேண்டுமென்று நிச்சயித்தனர். இதன் சம்பந்தமாய் கான்பூர் நகரக் காங்கிரஸ் கமிட்டியின் மே 21ந்தேதி கூட்டத்தில் பல தீர்மானங்கள் நிறைவேறின.

(தொடரும்)

# மான்ஸாவை பின்பற்றுகிறது ராம்துர்க்

——[எஸ். சுந்தரேசன்]——

இந்நாள், நாடெங்கும் உள்ள சமஸ்தான பிரஜைகள் தங்கள் உரிமைகளுக்காக போராடுகின்றார்கள் மிகுந்த தீரத்துடன். சில நாட்களுக்கு முன், மைசூர் மகாஜனங்கள் பொறுப்பாட்சிக் கிளர்ச்சி செய்ததும், அதனால் சரித்திரம் கரைபட்ட விதுராஸ்வதப் படுகொலையும் நம் கண்முன் நிற்கின்றது. திருவாங்கூரில் அடக்குமுறைத் தாண்டவம் தலைவிரித்தாடுகிறது. கொச்சியிலும் அரசியல் கிளர்ச்சி. வடக்கே மான்ஸாவின் கிளர்ச்சியும் பன்னாட்களாக நடந்த போராட்டமும், அதனால் ஏற்பட்ட நன்மையும் சரித்திரத்தைப் புதிதாக்கி இருக்கிறது.

இப்பொழுது, கர்னாடகத்தின் வட பாகத்திலுள்ள ராம்துர்க் என்ற சமஸ்தானத்தில் கிளர்ச்சி நடைபெற்று வருகின்றது. அந்த சமஸ்தானத்தின் மொத்த விஸ்தீரணம் 169 சதுர மைல்கள். அதில் 40 கிராமங்கள் இருக்கின்றன. அந்த சமஸ்தானத்துடைய வருஷ வருமானம் சுமார் ரூ. 2,55,561. இந்த சமஸ்தானத்திற்கு பிற சமஸ்தானங்களில் நடக்கும் அநீதிகள் விலக்கல்ல. இந்த சமஸ்தானத்தின் ஜனத்தொகை சுமார் 35,500. வருஷத்தில் கல்விக்காக 18,000 ரூபாயும் வைத்திய உதவிக்காக ரூ. 5718-ம், சமஸ்தானாதிபதியின் சொந்த செலவிற்கு ரூ. 34,000-ம் செலவு செய்யப்படுகிறது.

20 வருஷத்திற்கு முன் அந்த சமஸ்தானத்தின் வருஷ வருமானம் ரூ. 70,000மாக இருந்தது. இன்று 2½ லட்சத்திற்கு அதிகமாக உயர்ந்திருக்கின்றது. இவ்வருமானம் எங்கிருந்து வந்தது? எல்லாம் சமஸ்தானப் பிரஜைகளிடம் பலவந்தமாக சுரண்டியதுதான். வருஷம் 500 ரூபாய்க்குமேல் வருமானமுள்ளவர்களெல்லாம் வருமான வரி கொடுத்துத் தீரவேண்டுமாம்!

நிலத்தீர்வை பிரிட்டிஷ் இந்தியாவிலிருப்பது போல் மூன்று பங்கு அதிகம் அந்த ராம்துர்க் சமஸ்தானத்தில். குப்பைக் குழிகளுக்கும் வரி! ரோடுகளுக்கும் வரி! வீட்டை சுற்றியுள்ள பிரயோஜனமில்லாத நிலங்களுக்கும் வரி! சாணிக் குவியல்களுக்கும் வரி! எல்லாம் வரி மயம் ராம்துர்க் சமஸ்தானத்தில்.

இந்த 'கொடை வள்ளல்' ராஜ்யத்திலே பஞ்சம் தனது இருப்பிடத்தை ஏற்படுத்திக் கொண்டிருக்கின்றது. பக்கத்து நாடுகளில் பஞ்சம் ஏற்பட்டால் சர்க்கார் வரியைக் குறைப்பார்கள். ஆனால் ராம்துர்க் சமஸ்தானத்திலோ, 'யார் எக்கேடு கெட்டால் என்ன?' ராஜாவின் இரும்புப் பெட்டி நிரம்பவேண்டும். அவ்வளவுதான். வரி குறைப்பு என்ற பேச்சே கூடாது.

காலம் மாறுகிறதல்லவா? ராம்துர்க் பிரஜைகள் இக்கொடுங்கோலாட்சிக்கு முடிவு கட்ட துணிந்து விட்டார்கள். வரி கொடா இயக்கம் ஆரம்பிக்கப்பட்டு இரண்டு மாதமாக நடந்து வருகிறது. எங்கும் போலீஸ் தடி கொண்டு ஜனங்களை தாக்குகிறார்கள். ராஜா இரண்டு அவசரச் சட்டங்களை பிரயோகித்திருக்கின்றார். 1. உத்திரவின்றி பொதுக் கூட்டங்கள் கூட்டக்கூடாது 2. சமஸ்தான ரிஜிஸ்டர் சர்ட்டிபிகேட் இல்லாத எந்த சங்கமும் சட்ட விரோதம். இரண்டு மாதகாலமாக வரிகொடா இயக்கம் மும்முரமாக நடந்து வருகிறது. ராம்துர்க் விவசாயிகள் எதற்கும் துணிந்து, தங்கள் குறைகள் தீர்க்கப்படும் வரை போராடித் தீர்வது என்ற தீர்க்கமான முடிவிற்கு வந்திருக்கிறார்கள். அவர்களின் பலம் தினே தினே வளர்ந்து வருகின்றது. இந்தப் போராட்டத்திலும் மான்ஸா பெண்மணிகளைப்போல் வீரப் பெண்மணிகள் பலர் ஆடவர்களுடன் தோளோடு தோள் நின்று போராடுகின்றார்கள்.

ராம்துர்க், ஆஷ்வால், லக்ஷ்மேஸ்வர், மான்ஸா, முதலிய பல சமஸ்தான விவசாயிகளின் வீரப் போராட்டமானது நாட்டின் பொதுஜன எழுச்சியின் வேகத்தை தெளிவாக்கிக் காட்டுகின்றது. தேசிய காங்கிரஸ் மகாசபையானது சமஸ்தானங்களைப்பற்றிய தனது 'பிற்போக்கான' ஹரிபுரா தீர்மானத்தை மாற்றியமைத்து இந்த வீரர்களை—ஏகாதிபத்திய எதிர்ப்பு முன்னணியில் நிற்கக் கூடிய நாட்டின் சக்திகளை—தன்னுள் கொண்டுவர தாமதிக்கக் கூடாது என வற்புறுத்திக் கூறுகிறேன்.

# ஒழிந்தது லாப சம்பாத்தியம் சோவியத் ரஷ்யாவில்

சோவியத் கம்யூனிஸம் பொருள்களை வாங்கி உயர்ந்த விலைக்கு விற்று லாபம் சம்பாதிப்பவர்களை (பெரும் வியாபாரி, சில்லரை வியாபாரி) போற்றிப் புகழ்வதற்கு பதிலாக அவர்களை "துணிந்து செய்யும் சூதாட்டக்காரர்கள்" எனக் குற்றஞ்சாட்டி தண்டனைக் குள்ளாக்குகின்றது. வேலையின்மூலம் தங்கள் சொந்த லாபத்தைக் குறிக் கோளாகக் கொண்டு வேலைகளுக்கு பல ஆட்களை அமர்த்திவரும் முதலாளிகளை அவர்கள் கொடுக்கும் கூலியைப்பற்றி எள்ளளவும் கவலைப் படாமல் 'சுரண்டல்' என்ற குற்றம் சாட்டி அன்னவர்களை குற்றவாளிகளாக்கி தண்டனை விதிக்கின்றது சோவியத் கம்யூனிஸம்.

மன மாற்றத்தையும், கொள்கை மாறுதலையும் ரஷ்யா (U. S. S. R) தனது வாழ்க்கையில் லட்சியமாகக் கொண்டிருக்கின்றது என்பது மிகையாகாது. அடிப்படையான, பொருளாதாரப் பந்தத்தைப் பற்றியும், பிறரை அடிமையாக்கி கொள்ளை லாபம் கொண்ட வர்க்கம் அழிந்து, பெரும்பலான மக்களின் ஆட்சி நிலவி வருவதைப் பற்றியும், தீர்க்கமாகத் தெரிந்து கொள்ளாமல் சோவியத் ரஷ்யாவைப்பற்றி எவரும் தெளிவாக அறிந்து கொள்ள முடியாது.

நம் நாட்டில் இருக்கும் சுரண்டும் வர்க்கம் எதிர்பார்த்தது போல் அங்கு மாறுதலால், கெட்ட பலன் ஏற்படவில்லை.

சோவியத் கவர்ன்மெண்டு நாட்டின் முதலாளி என்பது மட்டும் அந்த அரசாங்கத்தின் அர்த்தமல்ல. பல்லாயிரக் கணக்கானவர்கள் சுயேச்சையாகவோ கூட்டாகவோ தங்களுடைய வாழ்க்கைக்குத் தேவையானவைகளைத் தேடிக்கொள்ள அந்த சோவியத் அரசாங்கம் தடுக்கவில்லை. பொது மார்க்கெட்டுகளில் தங்களின் சொந்த உழைப்பின் பலனாகக் கிடைத்த பொருள்களை இஷ்டப்பட்ட விலைக்கு விற்க—சோவியத் அரசாங்கம் தடுக்கவில்லை. சொந்த காரியங்களைக் குறித்த (Personal) சொத்துக்கள் இருக்கக் கூடாதென்றோ, அல்லது எல்லாப் பொருள்களையும் பொதுவாக வைத்துக்கொள்ள வேண்டுமென்றோ சோவியத் அரசாங்கம் கூறவில்லை. வருவாயில் வேற்றுமை இருப்பதையோ, சொத்துடைமையில் வேற்றுமை இருப்பதையோ, சம்பாதிப்பதில் வேற்றுமை இருப்பதையோ சோவியத் அரசாங்கம் தடுக்கவில்லை. கவர்ன்மெண்டு கடன்களுக்கு வட்டி கொடுப்பதோ, சேவிங்ஸ் பாங்கு டெபாஸிட்டுகளுக்கு வட்டி கொடுப்பதோ நிறுத்தப்படவில்லை சோவியத் அரசாங்கத்தில். ஆனால் தேக வலிமை கொண்டவர்கள், வேலை செய்யாமல் இருப்பது, அவர்கள் எவ்வளவு பணம் சேர்த்து வைத்திருந்தாலும், பழைய காலப் பணக்காரர் சந்ததியில் உதித்தவராயிருந்தாலும், அங்கு ஒரு மானக்கேடான செய்கையாகக் கருதப்படுகிறது. அங்கு, பணக்காரர் குடும்பங்கள், பெருநிலக்காரர்கள், முதலாளிகள், லேவாதேவிக்காரர்கள், இன்னோரன்ன மனித சமூகத்தின் அட்டைகள் இல்லை—இருக்கவும் முடியாது. முக்கியமாக பொருளுற்பத்தி சாதனங்களை தங்களின் "பிதிரார்ஜித" சொத்தாகக் கொண்டு தங்களின் 'மணி பர்ஸ்'களை நிரப்பிவந்த, கூலிக்கு மனிதர்களை அடிமைகளாக அமர்த்திக்கொண்டு, "உழைக்கப் பிறந்தவர்களை" சுரண்டிக் கொள்ளை லாபம் கொண்ட சக்திகள் பறந்தொழிந்தன.

# கிருஷிகர் உலகம்

### மான்ஸா

சென்ற வாரத்தில் மான்ஸா சமஸ்தானத்திலுள்ள 12 கிராமங்களின் விவசாயிகள் பொதுக்கூட்டம் மான்ஸாவில் நடைபெற்றது. மான்ஸாசமஸ்தானதிபதியும் ஆமதாபாத் காங்கிரஸ் ஊழியர்களும் கூட்டத்திற்கு வந்திருந்தனர். திருப்திகரமான சமரஸம் ஏற்பட்டதைப்பற்றி கூட்டத்தில் பேசப்பட்டது.

* * *

### தென்முடி

அவனுசி தாலூகா வடவள்ளிக் கடுத்த தென்முடி கிராமத்தில் நடந்த விவசாயிகள் பொதுக்கூட்டத்தில் பாப்பினீடு பேசியதின் சுருக்கம்:

"விவசாயிகளாகிய நீங்கள் எவ்வளவுக் கெவ்வளவு சந்தோஷமாகவும், சகல சௌகரியங்களையும் பெற்று இருக்கிறீர்களோ அவ்வளவுக் கவ்வளவு நாடு சிறப்புடனிருக்கும். காலையிலிருந்து மாலைவரை சில வேளை இராக் காலங்களிலும் பாடுபட்டு உழைத்தும், உங்கள் நிலைமை இன்று திருப்திகரமாயில்லை. உங்கள் உழைப்பின் ஒரு பாகமே அதிகாரிகள் சம்பளம். அதிகாரிகளெல்லாம் உங்கள் வேலைக்காரர்களே. ஏற்கனவே இருந்த ஜஸ்டிஸ் மந்திரிகள் தனி ரயிலில் பட்டணத்திலிருந்து மலைக்கும் மலையிலிருந்து பட்டணத்திற்கும் போய்க் கொண்டும், பெரிய விருந்துகளில் சாப்பிட்டும் காலத்தை கழித்து வந்தனர். ஆனபடியால் தான் உங்களுடைய ஒட்டிய வயிறு, ஒட்டி உலர்ந்த கன்னங்களோடு கூடிய கண்கள், ஒட்டைக் குடிசை, பீத்தல்பாய் ஜஸ்டிஸ் மந்திரிகள் கண்களில் படவில்லை. இந்த தேசம் சுதந்திரம் பெற வேண்டுமென்ற எண்ணமும் அவர்களுக்கில்லை. உங்கள் கஷ்டங்கள் அறவே ஒழிய இனி ஏற்படும் சுதந்திரப்போராட்டங்களில் நீங்கள் முக்கிய பங்கெடுத்துக் கொள்ளவேண்டும்."

* * *

### பூந்தோட்டம்

8—6—38ந் தேதி பூந்தோட்டத்தில் நடந்த காங்கிரஸ் பொதுக்கூட்டத்தில், தஞ்சை பூவராக அய்யங்கார் ரூ. 6000 பெருமான முள்ள பிராமிஸரி நோட்டுகளை விவசாயிகளிடமே திருப்பிக் கொடுத்தது மெச்சத்தக்கதென்றும், இது மாதிரியே மிராசுதார்கள் விவசாயிகளுக்கு உதவி புரிய வேண்டுமென்றும் கடன் நிவாரண சட்டத்தைப் பற்றியும் பூந்தோட்டம் காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி ஸ்ரீ. கே. குமாரசாமி பேசினர்.

* * *

### புக்ராயன்

புக்ராயன் தாசிலில் கூடியிருந்த 10000 விவசாயிகளுக்கு ஐக்கிய மாகாண ரெவின்யூ மந்திரி ஸ்ரீ ரபி மகமது குடிவார மசோதாவைப் பற்றி விளக்கிக் கூறுகையில், மசோதாவால் சிறுபான்மையோரான நிலச்சுவான்தார்கள் உரிமைகளுக்கு சிறிது பாதகம் ஏற்பட்டாலும், பெரும்பான்மையோரான குடி மக்களுக்கு அதிக நிவாரணமளிக்குமென்று கூறினர்.

"விளையும் பொருளில் ஐந்தில் ஒரு பாகத்தை குடிகள் சர்க்காருக்கு கொடுத்தால் போதும், பாக்கி நான்கு பாகமும் குடிகளைச் சேரும். இது மசோதாவின் முக்கிய அம்சமாகும், நிலத்திற்கு குடிகளே எஜமானர்கள். அவர்களுக்கு பரம்பரை பாத்யதைகளும் இருக்கும்.

"தொழிலாளர்களுக்காக சர்க்கார் 10 லக்ஷ ரூபாய் மூலதனத்தைக் கொண்டு ஒரு பாங்கி ஆரம்பித்திருக்கிறார்கள். விவசாயிகளின் நன்மைக்காக 1 கோடி ரூபாய் மூலதனத்தில், சர்க்கார் ஓர் கூட்டுறவு பாங்கியை ஆரம்பிக்கப் போகிறார்கள். விவசாயிகள் கால்நடை விதைகள் வாங்க வேண்டுமானால், இந்த பாங்கி அவர்களுக்கு கடன் கொடுத்து உதவும்" என்றும் கூறினர்.

* * *

### ராயல்சீமா

ராயல்சீமா பஞ்ச தினத்தை இந்தியா வெங்கும் நடத்தி, பண வசூல் செய்து அனுப்ப வேண்டுமென்று தோழர் ரெங்கா விடுத்திருந்த அறிக்கையைக் கண்டு நடுக்க முற்றேன் என்று அகில இந்திய கிருஷிகர் சபை தலைவர் சாமி சகஜானந்தம் பத்திரிகைக்கு விடுத்துள்ள செய்தியில் கூறியுள்ளார். அதோடு, பஞ்சத்தால் வாடும் 50 லக்ஷம் கிருஷிகர்களுக்கும் தொழிலாளர்களுக்கும் உடனே உதவி செய்ய வேண்டியது மிக அவசிய மென்றும், இன்றுள்ள கா. மந்திரி சபையார் துங்கபத்திரா பிராஜக்ட் சம்பந்தமாக நிரந்தரமான ஓர் ஏற்பாட்டையும், மற்றும் பல நிர்ப்பாசன வசதி வேலைகளையும் தோழர் ரெங்கா தெரிவித்தபடி செய்து முடிக்க வேண்டுமென்று குறிப்பிட்டுள்ளார். ஆங்காங்குள்ள கிருஷிகர் சபைகள், கிருஷிக உழைப்பாளர்கள், பொது மக்கள் அனைவரும் பஞ்ச நிவாரண கமிட்டியாருக்கு பொருள் உதவிசெய்ய கடமைப் பட்டிருக்கிறார்கள் என்றும் தோழர் ரெங்கா, பெஜவாடா என்ற விலாசத்திற்கு நன்கொடையை அனுப்பிவைக்க வேண்டு மென்றும் தெரிவித்துள்ளார்.

* * *

### ராம்துர்க்

வட கர்நாடகத்திலுள்ள ராம்துர்க் என்ற சமஸ்தானத்தில் விவசாயிகள் வரிகொடா இயக்கம் ஆரம்பித்து இரண்டு மாதமாகிறது போராட்டம் வெகு மும்முரமாக நடந்து கொண்டிருக்கிறது.

* * * *

### சகஜானந்த சரஸ்வதியின் செய்தி

அகில இந்திய கிருஷிகர் சபைத் தலைவர் தோழர் சாமி சகஜானந்த சரஸ்வதி ஓர் அறிக்கை வெளியிட்டுள்ளார்:

எம். என். ராய் 22—5—38ந் தேதி 'இண்டிபெண்டண்ட் இந்தியா'வில் 2 முழுபக்கங்கள், கோமில்லாவில் நடந்த அகில இந்திய கிருஷிகர் மகாநாட்டின் எனது தலைமைப் பிரசங்கத்தை குற்றம் கூறி எழுதியுள்ளார். அவருக்கு என் தலைமை உரையில் காணப்படும் வாதங்களை புரிந்து கொள்வதற்கே கஷ்டமாய் இருக்கிறதாம்! குழப்பத்திற்கு எல்லை யில்லாதிருக்கிறதாம்! தீர்க்கமான முடிவிற்குப் பிறகு தான் எனது தலைமை உரையை எழுதினேன். எனது தலைமைப் பிரசங்கத்தில் ஒரு கால் புள்ளியைக்கூட மாற்றுவதற்கில்லை. நான் அன்று கூறியதே உறுதியானது என்று இன்றும் கூற முன் வந்துள்ளேன்.

[அடுத்த வார பத்திரிகையில் சகஜானந்தரின் பதில் வெளிவரும்.—ப-ர்.]

# 'வாலிபர்கள் வாழ்க்கை துன்ப மயம்'

## சமஷ்டியை ஒழிக்க நேரடியான போராட்டம்

### வாலிபர் மகாநாட்டில் S. S. பாட்லிவாலாவின் சொற்பொழிவு

ஜூன் 5ம் தேதி குர்டா (ஒரிஸ்ஸா) என்னுமிடத்தில் வாலிபர் மகாநாடொன்று நடந்தது. தோழர் எஸ். எஸ். பாட்லிவாலா தலைமை வகித்தார். அவர் பேசியதின் சாராம்ஸம்:-

வாலிபத்தின் அழகு, பலம், ஆனந்தம் முதலியவைகளைப் பற்றியும் உழைப்பின் உயர்வைப் பற்றியும் பேசாத மேடைகளில்லை. கேட்டுக் கேட்டு நம் காதுகளும் புளித்துப் போய்விட்டன. சந்தோஷமும், சாந்தியும், வாலிபர்களை எதிர்நோக்கிக் கொண்டிருக்கிறதாம்! மனிதனை மனிதன் சுரண்டிக் கொண்டிருக்கிற பொழுது, உழைப்பு மனிதனை அடிமைப் படுத்திக் கொண்டிருக்கிற பொழுது, மேடைப் பிரசங்கிகள் வாலிபர்களின் வருங்கால க்ஷேமத்தைப் பற்றி அளந்து கொட்டி வருகிறார்கள். பிற்காலத்தில் டாக்டர்களாகலாம், லாயர்களாகலாம், எஞ்சினீயர்களாகலாம், பெரிய வியாபாரிகளாகலாம் என்றெல்லாம் வாலிபர்களாகிய நாம் ஆகாயக் கோட்டை கட்டிக்கொண்டிருக்கிறோம்.

ஆனால் இன்றுள்ள உண்மை நிலைமை என்ன? நினைத்தாலே மனம் நடுங்குகிறது. தொழிற்சாலைகளில் தொழிலாளர்கள் வேர்வை சொட்டச் சொட்ட உழைத்தும் வயிறாரச் சாப்பிடக் கூடிய கூலி பெறுவதில்லை. தொழிலாளிகளுக்கு தொழிற்சாலை சிறை தண்டனையாக விளங்குகிறது. வியாபாரத்திலே கழுத்தறுக்கும் போட்டி. உத்தியோகங்களில் ஒரு சிலர்தான் பணம் சேர்க்க முடிகிறது. பலர் பட்டினி. சில சோம்பேறிப் பணக்காரர்களின் கொழுத்த பருத்த பிள்ளைகளைத் தவிர மற்ற வாலிபர்களெல்லாம் வாழ்க்கையில் அனுபவிப்பது துக்கம், துன்பம்.

இந்த நாட்டை பொருளாதார அரசியல் அடிமைத்தனத்திலிருந்து மீட்கவேண்டுமென்றும் ஆர்வமும், சலியாத உழைப்பும், ஊக்கமும், உயர்ந்த நோக்கமும் கொண்ட வாலிபர்கள் தங்களுக்கெதிரே காண்பதென்ன? அவர்கள் மிகவும் கஷ்டப்பட்டு வேலை செய்யத்தயாராயிருக்கிறார்கள். அவர்கள் விஷயங்களை மிக நுட்பமாக கற்க ஆசைப்படுகிறார்கள். ஒரு புதிய இந்தியாவை, சுயேச்சையான இந்தியாவை, முன்னேற்றமான இந்தியாவை சிருஷ்டிக்க, அதற்காக உழைக்க அவர்கள் தயாராகக் காத்திருக்கிறார்கள். முற்போக்கு, கலை, சாந்திக்காக தங்கள் உயிரையே தியாகம் செய்யத் தயாராயிருக்கிறார்கள்.

#### வறுமையும், வேலையில்லாத் திண்டாட்டமும்

அதற்கு வாலிபர் பெறும் பதில் என்ன? பட்டினி, துக்கம், வேலையின்மை. தேய்ந்த உடல்; காய்ந்தமனம் இருமல், காசம் இரத்த சோஸ்க முதலிய கொடிய வியாதிகளுக்கு வறுமையால் இரையாகி வாலிபர்கள் வேலையைத்தேடி, ஒரு பிழப்பை நாடி மூலைமுடுக்கெல்லாம் அலைந்து, அழுக்கடைந்த இடங்களில் தூங்கி, தன்னைத்தானே நொந்து வெட்கித் தலைகுனிகிறார்கள். இவ்வளவிற்கும் காரணம் யார்? இந்தியா செல்வம் நிறைந்தநாடு. அதை ஆளும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் அளவிட முடியாத செல்வத்தை வாரிச் செல்லுகிறது. இந்தச் செல்வம் செரிந்த நாட்டில் விரல்விட்டு எண்ணக் கூடிய சிலர்தான் பணக்காரர்கள். மற்ற மக்கள் அனைவரும் பட்டினியால் வாடும் பஞைதகள்.

இந்தியா, மக்கள் மலிந்த நாடு. அவமரியாதையிலும், பட்டினியிலும், துக்கத்திலும் உழலும் லக்ஷக்கணக்கான, கோடிக்கணக்கான இந்நாட்டு வாலிபர்கள் ஒன்று சேர்ந்து அந்த அக்ரமங்கள் அநீதிகள், அட்டூழியங்கள் ஒழிய வேண்டுமென்று வீறிட்டு எழுந்தால் என்னகதி ஆகும்?

இந்திய வாலிபர்கள் கஷ்டப்பட்டு யோக்கியமாக, முற்போக்காக, சுயமரியாதையாக, சந்தோஷமாக, சுயேச்சையாக இந்த நாட்டில் வாழ விரும்புகிறார்கள். ஆகையால் நாம் இனிமேல் நம்மைப் பிறர் மிதித்து ஆள இடங்கொடுக்க மாட்டோமென்று உறுதி கொள்ளுவோம். நமக்குள் வேற்றுமைகளுக்கு இனி இடங்கொடோம்.

கீழ்க்கண்ட முறைகளில் வாலிப சங்கங்களை அமைக்க வேண்டும்.

1. கக்ஷிப் பாகுபாடில்லாமல் பலதிறப்பட்ட வாலிபர்களையும் திரட்டி வாலிப சங்கங்களை ஸ்தாபிக்கவேண்டும்.

2. இந்திய மக்களின் பிரதம ஏகாதிபத்ய எதிர்ப்பு ஸ்தாபனமான தேசிய காங்கிரஸை பலப்படுத்தி ஆதரிக்கவேண்டும்.

3. வாலிப சங்கங்கள் தொழிற் சங்கங்களுடனும் விவசாயி சங்கங்களுடனும் ஒத்து வேலை செய்யவேண்டும்.

4. பிரஜா உரிமைகளுக்காக கிளர்ச்சி செய்து போராடவேண்டும்.

5. தொண்டர் படைகளை தயார் செய்வது.

6. எல்லா ஜனநாயக சக்திகளோடும், இயக்கங்களுடனும் ஒன்றுபட்டு வாலிபர் கோரிக்கைகளுக்காக ஆர்பாட்டங்களைத் துவக்கவேண்டும்.

7. வாசிக்கும் சங்கங்கள், பிரசங்கங்கள், தர்க்கங்கள், வெளியூர் பிரயாணங்கள், புத்தக நிலையங்கள் இவைகளை நடத்த வேண்டும்.

8. இதர மாகாணங்களிலுள்ள வாலிப இயக்கங்களுடனும், இதர தேசங்களிலுள்ள வாலிப் இயக்கங்களுடனும் உறவு ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

நாம் மனிதர்கள். மனிதர்களாக நடத்தப்பட வேண்டும். நாம் ஆடுமாடுகளல்ல. அடிமைகளல்ல. நமக்கு இந்த உலகில் மனிதராக வாழ உரிமையுண்டு.

#### காந்திஜியுடன் மாறுபாடு

நம்முடைய லக்ஷியத்தை அடையும் முறையில், நாம் காந்தியுடன் மாறுபடுகிறோம்.

ஹரி ஜனங்களுக்கு கிணறுகள் வெட்டிக் கொடுத்து விடுவதாலோ, கோயில்களைத் திறந்து விடுவதனாலோ அவர்களுடைய நிலைமை உயர்ந்துவிடாது. அவர்களுடைய பொருளாதார நிலைமையை உயர்த்தாமல் மற்றெதைச் செய்தும் என்ன பயன்?

இந்தியப் பொது மக்களின் பொருளாதாரப் பிரச்சினைகளை கதர் இயக்கத்தால் தீர்த்துவிட முடியாது. கதர் கைத்தொழில் ஒரு உப கைத்தொழிலேயொழிய, அது நம் நாட்டு பிரச்சினைகளுக்கு ஒரு ஔஷதமாகி விடாது.

காந்தியத்தினால் நம் 'லக்ஷியம் கைகூடவில்லை. ஆகையால் அதை அலசிப் பார்க்கவேண்டிய தவசியம்.

#### பதவி ஏற்பு

அடிமைச் சீர்திருத்த சட்டத்தை உடைக்கும் நோக்கத்தோடும், பிற்போக்காளர்கள் பதவிகளில் புகுந்து தேசிய இயக்கத்திற்கு விரோதமாகவும் ஏகாதிபத்யத்திற்கு பக்கபலமாகவும் இருக்க விடாமலிருக்கும் நோக்கத்தோடும்தான் காங்கிரஸ் மந்திரிப் பதவிகளை ஏற்க முடிவு செய்தது. மேற்படி நோக்கங்களைக் காரியத்தில் நிறைவேற்றும் முயற்சியில் காங்கிரஸ் மந்திரிகள் உண்மையில் அநேக இடைஞ்சல்கள், தொல்லைகளைச் சமாளித்து வருகிறார்கள். ஆயினும் அவர்கள் எந்த முக்கிய நோக்கத்திற்காக பதவி ஏற்றுக் கொண்டார்களோ அதிலிருந்து விலகிவிட்டார்கள் என்பதோடு அந்த நோக்கத்திற்காக என்னென்ன வேலைகள் செய்ய முடியுமோ அந்தப்படி எல்லாம் செய்யாமல் விட்டுவிட்டார்கள்.

காங்கிரஸ் மந்திரிகள், தங்களுடைய ஆக்ஷி நிர்வாகத்தை காங்கிரஸ் கமிட்டிகளினுடைய ரிபோர்ட்டுகளை அஸ்திவாரமாகக் கொண்டு அமுல் நடத்த வேண்டுமேயொழிய, பிரிட்டிஷ் ஏகாதிபத்திய கங்காணிகளான காங்கிரஸ் விரோதிகளான உத்யோகஸ்தர்களுடைய ரிபோர்ட்டுகளை உண்மை எனக் கொண்டு எதையும் முடிவு செய்யக் கூடாது. இம்மாதிரிச் செய்தால் தான் காங்கிரஸ் கமிட்டிகளுடைய செல்வாக்கும் அதிகாரமும், பெருகும். இந்த நாட்டு ஆட்சியை எந்த க்ஷணத்திலும் ஏற்று நடத்தக் கூடிய வல்லமை பெரும். இந்த அடிப்படையான தத்துவத்தை மறந்துவிட்டார்கள். அதற்கு மாறாக சீர்திருத்த சட்டத்தை உடைக்கச் சென்ற காங்கிரஸ்காரர்கள் தங்களுடைய ஸ்மரணை இல்லாமலே அதை "வெற்றிகரமாக" நடத்திக்காட்டி வருகிறார்கள்.

#### சமஷ்டி

காங்கிரஸ் சமஷ்டியை தூள் தூளாக்க முடிவு செய்து இருக்கிறது. ஆயினும் சில காங்கிரஸ் தலைவர்கள் போகும் போக்கு காங்கிரஸ் தீர்மானத்திற்கு விரோதமாகச் செல்லுகிறது. புரட்சிகரமான காங்கிரஸை வெறும் சட்டசபைக் கட்சியாக மாற்றிவிடும் நோக்கத்தோடு அத்தலைவர்கள் வேலைசெய்கின்றனர். இந்த சமஷ்டி விஷயமாக எந்த விதமான சமரஸத்தையும் ஏற்றுக்கொள்ள முடியாது. சமஷ்டி நம்மீது திணிக்கப்படுமானால் நேரடியான போராட்டத்தைக் கிளப்பி ஏகாதிபத்யத்தை எதிர்பதைத்தவிர வேறு வழியில்லை. அந்த எதிர்ப்பிற்காக நாம் இன்று முதல் நம் படைகளை தயார் செய்யவேண்டும். வரும் போது பார்த்துக் கொள்ளலாமென சும்மாயிருக்கலாகாது.

# தொழிலாளர் உலகம்

## சமதர்மக் கொடி

(கதர்க்கப்பல் கொடி தோணுதே என்றமெட்டு)

பல்லவி

சம தர்மக் கொடி தோணுதே.
சாரம் நிறைந்த வாழ்க்கை வீரரின் திவ்ய லக்ஷ்ய (சம)

அநுபல்லவி

குமையும் எளியோர் துயர்க் கொடுமையைச் சுட்டெரிக்கும்
அமையும் புது உலக ஆட்சியைச் சித்தரிக்கும் (சம)

சரணங்கள்

பிச்சைப் பிழைப்புமில்லை பெருந்திண்டி வாழ்க்கையில்லை
எச்சில் நாயோடு சண்டை யிடும் தரித்திரமில்லை

இறவாத—இன்பம்
குறையாது—நாளும்
தரவோதும்—இங்கு
ஏழை எளியர் வாதம் (சம)

வட்டி வரியாற் கொள்ளை வாடகை லாபக் கொள்ளை
ஒட்டி உறிஞ்சும் கொள்ளை ஊர்ப்பட்ட பகற் கொள்ளை

ஒழித்தோங்க—இன்பம்
செழித் தோங்க—மக்கள்
விழித் தோங்க—நாளும்
வெறுமை அடிமை நீங்க (சம)

—ப. ஜீவானந்தன்

### சென்னை

சில நாட்களாக சூளை நெசவாலை மில் தொழிலாளிகள் வேலை நிறுத்தஞ் செய்து வருகிறார்கள். பொருளாதார நிலையை உணர்வதற்காக லேபர் கமிஷனர் கம்பெனியின் கணக்குகளைப் பார்த்து கம்பெனியின் தொழிலாளிகளுக்கு நன்மை ஏதேனும் செய்ய முடியுமா என்று சொல்லுவார் எனத் தெரிகிறது. ஆனால். தொழிலாளிகள் வேலை நிறுத்தத்தை வாபஸ் பெற்றுக் கொண்ட பிறகுதான் அம்மாதிரி செய்யப்படும் என்பது நிபந்தனையாம். அம்மாதிரி செய்தும் தொழிலாளிகளுக்கு பாதகமேற்பட்டால் மேல் என்ன செய்வது என்பதை அந்த லேபர் கமிஷனர் கூறவில்லை.

வேலை நிறுத்தம், சாதாரணமான தொழிலாளர்களின் கோரிக்கைகளை மில் மானேஜ்மெண்டார் நிறைவேற்ற மறுத்ததால் தான் ஏற்பட்டிருக்கிறது.

* * *

திருவத்தியூர் தீக் குச்சித் தொழிலாளர் வேலை நிறுத்தத்தில் ஒருவித மாறுதலுமில்லை.

* * *

ஜமால் கிளாஸ் பாக்டரித் தொழிலாளர்களின் வேலை நிறுத்தத்திலும் ஒருவித மாறுதலில்லை.

* * *

முனிசிபல் கார்ப்பரேஷனுக்கு, முனிசிபல் தொழிலாளிகளின் சங்கம், தங்கள் குறைகள் நிவர்த்திக்கப்படா விட்டால் வேலை நிறுத்தம் செய்வதாக நோட்டீஸ் கொடுத்திருக்கின்றனர். இந்த வேலை நிறுத்தம் நடந்தால் 600 தொழிலாளிகள் சம்மந்தப்படுவார்கள்.

* * *

மதராஸ் பிரஸ் லேபர் யூனியன், டயோசிஸன் பிரஸ் மானேஜ் மெண்டிற்கு, ஜூன் 23ந் தேதிக்குள், தொழிலாளிகளின் குறைகள் நிவர்த்திக்கப் படாவிட்டால் ஸ்ட்ரைக் செய்வதாக நோட்டீஸ் கொடுத்திருக்கிறது. யூனியன் பொதுக் காரியதரிசி தோழர் எ. எஸ். கே. அய்யங்கார், நெருக்கடி சமரசமாகத் தீர்க்க மே மாதம் 4ந் தேதியிலிருந்து செய்த முயற்சிகளெல்லாம் வியர்த்தமாயின எனத்தெரிகிறது. வேலை நிறுத்தத்திற்கு முக்ய காரணம் 10 தொழிலாளிகளை வேலையிலிருந்து நீக்கியது தான் எனவும் தெரிகிறது.

### G. I. P. ரயில்வே

சென்றவாரம், ஜி.ஐ.பி. ரயில்வேத் தொழிலாளர்களின் இரு எதிர்ப்பு சங்கங்களும் அகில இந்திய தொழிற் சங்க ஒற்றுமையைப் பின்பற்றி, தங்களுக்குள்ளிருந்த அபிப்பிராய பேதத்தைப் போக்கி, இரண்டும் ஒன்றுகச் சேர்ந்தன.

### நாகபூர்

நாகபூர் மாகாண நெசவுத் தொழிலாளிகள், கூலி கொடுப்பதை பற்றிய சட்டப்படி மில் முதலாளிகளுக்கு (மாடல் மில், எம்ப்ரஸ் மில்) ஸ்ட்ரைக் நோட்டீஸ் கொடுக்க நாகபூர் நெசவுத் தொழிலாளிகள் சங்கத் தலைவர் ஸ்ரீ. வி. ஜி. பால்வெய்க்கிற்கு சங்கம் அதிகாரமளித்திருக்கிறது. அந்த நோட்டீஸில், தொழிலாளிகளின் கோரிக்கைகளை நிறைவேற்றும்படியும், அப்படி நிறைவேற்றத் தவறினால் ஜூலை முதல் தேதியிலிருந்து வேலை நிறுத்தம் ஆரம்பிக்கப்படும் எனவும் அறிவிக்கிறது. தோழர் ஆர். எஸ். ரூய்க்கர், ராஜ்னந்கான் என்ற இடத்திலிருந்து இங்கு ஜூன் 19ந்தேதி வந்திருக்கிறார். ஜூன் 25ந்தேதி ஸ்ட்ரைக் கமிட்டிக் கூட்டம் நடைபெறும்.

### ராஜ்னந்கான்

இங்கு நடந்துவந்த மில் தொழிலாளிகளின் உள்-வேலை நிறுத்தம் (Stay-in-Strike) முடிவடைந்திருக்கிறது. வேலை நிறுத்தத்திற்கு காரணமாயிருந்த கோரிக்கைகளை மத்யஸ்தப் போர்டு கவனிக்கும்.

### கராச்சி

கராச்சி ட்ராம்வே தொழிலாளிகள் தங்கள் தூதுகோஷ்டியை கம்பெனி மானேஜ்மெண்ட் ஏற்க மறுத்ததால், வேலைநிறுத்தம் செய்தனர். உடனே கம்பெனி மானேஜ்மெண்ட், தொழிலாளர்களின் உடனடிக் கோரிக்கைகள் எட்டையும், நிறைவேற்றுவதாகக் கூறியது. ஆகவே வேலை நிறுத்தத்தை தொழிலாளர்கள் முடித்து விட்டனர். வேலைநிறுத்தம் காலையில் ஆரம்பிக்கப்பட்டது. இரவு 9 மணிக்கு முடிவடைந்தது. கம்பெனி தன் வார்த்தையைக் காப்பாற்ற தயங்காது எனத் தெரிகிறது.

### பம்பாய்

முனிசிபல் தொழிலாளர், சங்கம், 'தங்கள் குறைகள் ஜூலை 2ந்தேதிக்குள் நிவர்த்திக்கப்படா விட்டால், வேலை நிறுத்தம் செய்வோம் என்று நோட்டீஸ் கொடுத்திருக்கிறது. சங்கக் காரியதரிசி கூறுகிறார்" சமாதானமான சர்வ சமரச முயற்சிகளும் பயனற்றுப் போகவே, தொழிலாளர்கள் தங்கள் கடைசி ஆயுதமாகிய வேலை நிறுத்தத்தைத் தொடங்குவோம் என நோட்டீஸ் கொடுத்திருக்கின்றனர்.

### முஸபானி செம்புச் சுரங்கத்தில் வேலை நிறுத்தம்

மேற்படி சுரங்கத் தொழிலாளிகளில் பலர் போதுமான காரணங்கள் இல்லாமல் வேலையை விட்டு நீக்கப்பட்டதும், கூலி உயர்வு இல்லாததும், பிரமோஷன் இல்லாததும், தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்ததற்கு காரணங்கள். சுரங்க வாயிலண்டை, போலீஸும், கூர்க்கா சோல்ஜர்கள் நிறுத்தப்பட்டிருக்கின்றனர்.

பாட்னாவிலிருந்து வெளிவரும் சர்ச்லைட் என்னும் ஒரு தேசியப் பத்திரிகை "தொழிலாளத் தலைவர்கள், வேலை நிறுத்தத்தை கண்யமான முறையில் முடித்து விட பலத்த முயற்சி செய்தார்கள். ஆனால், சுரங்க மானேஜ்மெண்ட் அம்முறைக்கு இணங்கவில்லை. ஆகையால், பொதுஜன கவர்ன்மெண்டை நாம் கேட்டுக் கொள்வதென்னவெனில், தொழிற் வேலை நிறுத்தங்கள் அவசியம் என்ற காரணங்களைக் கொண்டு கம்யூனிஸ்ட்கள் செய்யும் கிளர்ச்சி என்பது பழங்காலப் பேச்சு நாம் அம்மாதிரி எண்ண முடியாது. வேலை நிறுத்தத்திற்கு தொழிலாளிகளின் குறைகள் நிவர்த்திக்கப்படாமையே" எனக் கூறுகிறது.

### மதுரை

மதுரையிலுள்ள பித்தளைப் பாத்திர தொழிலாளர்களின் சங்கத்தை, மதுரை, விக்டோரியா எட்வர்டு ஹாலில் தமிழ்நாடு காங்கிரஸ் சோஷியலிஸ்டு கட்சி பொதுக் காரியதரிசி தோழர் ப. ஜீவானந்தன் ஆரம்பித்து வைத்து தொழிலாளர்களின் ஒற்றுமையையும், சங்கத்தின் அவசியத்தையும்பற்றி பிரசங்கம் நிகழ்த்திய பின் தோழர் டி. எல். சசிவர்ணம் சொற்பொழி வாற்றியதும் குரூப் போட்டோ எடுக்கப்பட்டது பின்பு ஊர்வலமாக வடக்கு மாசி வீதி காங்கிரஸ் சோஷியலிஸ்டு ஆபீசுக்கு வந்து கலைந்தார்கள்.

### நெல்லிக்குப்பம்

சென்ற 14-6-38 மாலை ஈ. ஐ. டி. அண்டு எஸ். எப். லிமிடெட், தொழிலாளிகள் கூட்டம் ஒன்று நடைபெற்றது. தொழிலாளர்கள் குறைகளைப்பற்றி பல தோழர்கள் பேசினார்கள்.

### சென்னை கள் இறக்கும் தொழிலாளர் சங்கம்

23-6-38ந் தேதி நடைபெற்ற சென்னை கள் இறக்கும் தொழிலாளர் சங்க வருடாந்திர மெம்பர்கள் கூட்டத்தில், பொதுக் காரியதரிசி அறிக்கை வாசிக்கப்பட்டு ஏகமனதாக ஒப்புக்கொள்ளப்பட்டது. ஆடிட்டர்களால் பரிசோதிக்கப்பட்ட இந்த வருஷ மார்ச் மாதத்தோடு முடிவான சென்ற வருஷ வரவு செலவு கணக்கும் ஏகமனதாக ஒப்புக்கொள்ளப் பட்டது. புது வருஷத்திற்கு (1938—'39) கீழ்க்கண்டவர்கள் உத்தியோகஸ்தர்களாக ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

தலைவர்: வி. நடேச கிராமணி, உபதலைவர்கள்: சுந்தரமூர்த்தி கிராமணி, ஜெயசிங் பாட்டியா, பொதுக்காரியதரிசி: கே. முருகேசன், காரியதரிசி: எம். நடேசன், பொக்கிஷதார்: சுந்தரமூர்த்தி கிராமணி. கமிட்டி மெம்பர்களாக 15 தோழர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

"தொழிலாளர் கடமை" என்பது பற்றி தோழர் ப. ஜீவானந்தம் பேசியபின், கூட்டம் முடிந்தது.

### டையோசிஸன் பிரஸ் 'ஸ்ட்ரைக்'

சென்னை டையோசிஸன் பிரஸில் இன்று 25-6-'38 வேலை நிறுத்தம் ஆரம்பமாகி இருக்கிறது.

## மதுரை காங்கிரஸ்காரர்கள் மீது வழக்கு

### தோழர் செல்லையா வாபஸ் வாங்கிக் கொண்டார்

மதுரை நகர காங்கிரஸ் கமிட்டி கூட்டத்தில் தோழர் செல்லையாவை, மற்ற காங்கிரஸ்காரர்கள் தாக்கிய விஷயமாய், ஸ்ரீ எ. வைத்திநாத அய்யர், ஸ்ரீ என். எம். ஆர். சுப்பராமன் முதலிய எட்டு பேர்கள் மீது மதுரை டவுன் சப் மாஜிஸ்திரேட் கோர்ட்டில் தாக்கல் செய்யப்பட்டிருந்த வழக்கு விசாரணைக்கு வந்ததும் தமிழ்நாடு காங்கிரஸ் காரியக் கமிட்டி தீர்மானப்படி தோழர் செல்லையா, கோர்ட்டில் ஆஜராகி, த. நா. கா. காரியக் கமிட்டி தீர்மானப்படி தான் தாக்கல் செய்த வழக்கை வாபஸ் வாங்கிக்கொண்டார். தமிழ்நாடு காங்கிரஸ் சோஷியலிஸ்டு கட்சி காரியதரிசி தோழர் பி. ஸ்ரீனிவாஸராவிட மிருந்து, கேஸை வாபஸ் வாங்கிக் கொள்ளும்படி தோழர் செல்லையாவுக்கு கடிதமும் கிடைத்தது

## "ஜனசக்தி"க்கு உதவி நாடகம்

(o)

சென்ற 19-6-38 ஞாயிற்றுக்கிழமை யன்று திண்டுக்கல்லில் "ஜன சக்தி" நிதிக்காக ஓர் உதவி நாடகம், பல நடிகர்களால் இலவசமாக ஆடிக் கொடுக்கப்பட்டது. செலவு போக "ஜன சக்தி" நிதிக்கு 100 ரூ. கிடைத்தது. அந்நாடகத்தில் பங்கு கொண்ட தோழர்கள், S. S. விஸ்வநாத தாஸ், K. T. நடராஜ பிள்ளை, K. P. ஜானகி, V. S. சிவமய்யர், P. M. காதர்பாஷா சாகிப், M. B. லக்ஷ்மிபாய், K. K. நாராயணன், M. K. துரைசாமிப் பிள்ளை, M. R. துரைசாமி, M. R. பாலசுந்தரம், T. S. அருணாசலம், A. N. நடராஜன், K. T. N. மேனகா, A. பேபி முதலியோராவார்கள். இந்நாடகம் நடைபெறப் பேருதவியாக இருந்தவர், மதுரை நடிகர் சங்கத்தின் காரியதரிசி தோழர் S. குருசாமி ஆவார்.

மேற்கூறிய அன்பர்கள் எல்லோருக்கும் இன்னும் இவ்விஷயத்தில் உதவி புரிந்த சகல நண்பர்களுக்கும் எமது மனம் நிறைந்த நன்றி உரித்தாகுக. —ஆசிரியர்.

### நன்கொடை

"ஜன சக்தி" நிதிக்காக, ஸ்ரீ வைகுண்டம் தோழர் P. ஷண்முகம் ரூ. 15 நன்கொடை அளித்துள்ளார். அவருக்கு எமது மனமார்ந்த நன்றி உரித்தாகுக. —ஆசிரியர்.



## உள்நாட்டுச் செய்திகள்

பெங்களூர்

விதுராஸ்வதப் படுகொலை விசாரணைக்கு ஏற்படுத்தப்பட்ட மைசூர் கவர்ன்மெண்டின் பிரதிநிதி, காங்கிரஸ்காரர்களுடைய பிரசங்க காப்பி ஒன்றை தாக்கல் செய்தார். அதில் மைசூர் கவர்ன்மெண்டின் எண்ணத்தைப்பற்றி திரித்துக் கூறியிருப்பதாகக் கூறுகிறார். "நான் காங்கிரஸ்காரனாக இருந்தேன். உலகத்திலேயே கண்யமான அரசியல் சபை அதுதான். இம்மாதிரி இவர்கள் பேசுவதற்கு, காங்கிரஸ் மகாசபைப் பொருப்பாளியாகாது." மேலும் விசாரணை நடந்து வருகிறது.

* * *

சீனாவிற்கு தற்பொழுது டாக்டர்கள் மட்டும்தான் இந்தியாவிலிருந்து அனுப்பப்படும். டாக்டர்கள் செலக்ஷன் இன்னும் ஒரு வாரத்திற்குள் முடிவடையும் என ஸ்ரீ ஹத்திசிங் பத்திரிக்கைகளுக்கு விடுத்திருக்கும் செய்தியில் கூறுகிறார்.

வங்காளம்

மிதுனபுரி ஜெயிலிலிருக்கும் காவற் கைதி ஸெய்லேஷ்வர் சக்ரவர்த்தி, காவற் கைதிகளை விடுவிக்கும்படி வங்காள கவர்ன்மெண்டிடம் பலமுறை கேட்டிருந்தும் இதுவரை அரசியல் கைதிகளை விடுதலை செய்யாததின் காரணமாக, உண்ணாவிரதமிருந்து வருகிறார்.

* * *

ஹக் மந்திரி சபையிலுள்ள நௌஷரலிக்கும் மற்றுமுள்ள காபினட் மெம்பர்களுக்குமுள்ள தகராறு தீர்ந்துவிட்டது.

கனம் ஹக்கும், அவரது சகாக்களும் 22-ந்தேதி இரவு 12-45 மணிக்கு தங்கள் ராஜீனாமாவை சமர்ப்பித்தனர். நௌஷரலி இதற்கு சில நிமி[illegible] முன் தன்னுடை[illegible] நாமாவை [illegible]

ராஜி[illegible] உட[illegible] பிர[illegible] ச[illegible] மீ[illegible]

## விக்கிரமசிங்கபுத்தில் 3000 தொழிலாளர்கள் அடங்கிய பொதுக்கூட்டம்

—:O:—

### தோழர் ப. ஜீவானந்தன் வீரமுழக்கம்

17-6-38-ந் தேதி இரவு 7 மணிக்கு விக்கிரமசிங்கபுரம் தேசிய வாலிபர் சங்கத்தின் ஆதரவிலும் காங்கிரஸ் கமிட்டியின் ஆதரவிலும் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. சுமார் 3000 தொழிலாளர்கள் ஆண்களும், பெண்களுமாக கூடியிருந்தார்கள். தோழர் பி. சொக்கலிங்கம் அவர்கள் தலைமை வகித்தார். தலைவர் முகவுரைக்குப் பின் தோழர் ப. ஜீவானந்தன் பேசியதாவது :— தொழிலாளர்கள்தான் இந்த தேசத்தின் விடுதலைப் போராட்டத்தில் முக்கிய பங்கெடுத்து உழைக்கவேண்டியவர்களென்றும் இன்றைக்கு ஏகாதிபத்திய எதிர்ப்பு ஸ்தாபனமாகிய காங்கிரஸ் மகாசபையோடு ஒத்துழைத்து ஏகாதிபத்தியத்தை முறியடித்து வரப்போகும் சுயராஜ்யம் தொழிலாளர்கள் ராஜ்யமாக சோஷியலிஸ முறைப்படி அமைக்க வேண்டுமென்றும், தொழிலாளிகள் கட்டுப்பாடாக இருந்து விஷயங்களைத் தெரிந்து உலகப் போக்கை அறிந்து இன்று கொதித்துக் கொந்தளித்துக் குமுறிக்கொண்டு வரும் மகத்தான தொழிலாளரின் போராட்டத்தை உணர்ந்து உலகின் தரித்திரத்தை ஒழித்து சுரண்டுவோர் சுரண்டப்படுவோர் என்ற வித்தியாச மன்னியில் சமத்வமான வாழ்க்கையை அடைய விடாமுயற்சி செய்ய வேண்டுமென்றும், தொழிலாளரின் வளர்ச்சிக்கு முட்டுக்கட்டையாக இருக்கும் இந்த பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை முறியடிப்பதையே முதல் போராட்டமாக ஏற்று நடத்தவேண்டுமென்றும், வெகு விரிவாக சுமார் $1\frac{1}{2}$ மணி நேரம் பேசினர். கூட்டம் அமைதியாய் உற்சாகமாக இருந்தது. சுமார் 9 மணிக்குக் கூட்டம் இனிது கலைந்தது.

பின்னர் இரவு 9-30 மணிக்கு அம்பா சமுத்திரம் வேத கோவில் முன்பாக ஸ்ரீமான் [illegible] மூப்பனுர் அவர் [illegible] லர் பொதுக் [illegible] ற்றது. [illegible] அவர் [illegible] நேரம் [illegible] யை [illegible] வு [illegible] யச் சென்றவர்கள் அத்தனை பேரும் விஜயம் செய்திருந்தார்கள். தோழர் பி. சொக்கலிங்கம் அவர்கள் தலைமை வகித்தார். தோழர் ப. ஜீவானந்தன் அவர்கள் மில் தொழிலாளரின் கஷ்டங்களைப் பற்றி சொல்லி அதற்கு விடுதலை மார்க்கமும் சொல்லி சுமார் 1-30மணிநேரம் பேசினர்கள். கூட்டம் இனிது கலைந்தது.

# கலாசாலை சம்பள உயர்வு

## மாணவர்கள் ஆட்சேபனை

(சென்னை மாகாண மாணவர் சங்கக் காரியதரிசி தோழர் ராமச்சந்திர ரெட்டி எழுதுகிருர்)

சென்னை கவர்ன்மெண்டார் சமீபத்தில் மாணவர்களிடம் வசூல் செய்யப்படும் சப்பள விகிதங்களை இந்த வருஷத்தினின்று உயர்த்த உத்தரவிட்டிருக்கின்றனர். சென்னை மாணவர் சங்கத்தின் நிர்வாகக் கமிட்டியார் இதைக் கண்டனம் செய்து, சம்பள உயர்வை நீக்கவேண்டுமென்று ஒரு பிரேரணை நிறைவேற்றி யிருக்கின்றனர். அதன் சம்பந்தமாக பின்வரும் அறிக்கையை வெளியிட்டிருக்கின்றனர். நாம் இதற்குப் பூரண ஆதரவை அளித்து, நமது நேயர்களும் அன்பர்களும் ஆதரவளித்து, ஆங்காங்குள்ள சபைகள் மூலம், காங்கிரஸ் மந்திரி சபை மேற்படி சம்பள உயர்வுகளை ரத்து செய்யுமாறு கேட்டுக் கொள்வார்களாக. —ப-ர்.

சமீபத்தில் இன்டர்மீடியெட் வகுப்புகளில் வருடத்திற்கு ரூ. 6-ம், பி.ஏ. வகுப்புகளில் ரூபாய் பன்னிரண்டுமாகச் சம்பளங்கள் உயர்த்தப் பெற்றிருக்கின்றன.

### சில புள்ளிகள்

படிப்புச் சேலவு:—உயர்தரப் பாடசாலைகளில், காலேஜ்களில், சுமார் 11,000 மாணவர்கள் இருக்கின்றனர். காலேஜில் படிக்கும் வயது 16-21. இவ்வயதிற்குள் நம் ராஜதானியில் 45 லக்ஷம் ஜனங்கள் இருக்கலாம். இதில் குறைந்தது 10 லக்ஷமேனும், காலேஜ்களில் படிப்பதற்கு ஆசையும், வேண்டிய படிப்பாளர்களா யிருக்கலாம். 10 லக்ஷத்தில் 11,000 இவ்வளவு சிறுபான்மையோரே தற்சமயத்தில் உயர்தரப் படிப்புள்ளோர்!

“இது நம்நாட்டில் படிப்புச் சிலவின் அதிகத்திற்கு ஓர் அறிகுறி. ஒரு மாணவன் காலேஜில் வாசிப்பதற்கு, சம்பளத்திற்கு ரூ. 100, புத்தகம் முதலியவற்றிற்கு ரூ. 130, வாழ்க்கைச் சிலவிற்கு ரூ. 250 ஆக மொத்தம் ரூ. 480. கிட்டத்தட்ட ரூ. 500 வருடத்தில் செலவிட வேண்டும். நம் நாட்டில் இருப்பவர்களின் வருஷாந்திர வருமானம் சராசரி ரூ. 30. உயர்தரக் கல்வியின் ‘விலை’ இதைப்போல் பன்மடங்குக்கு மேலாயிருக்கின்றது.

### உயர்தரக் கல்விச் செலவில் மாணவர்களே அதிகம் கொடுக்கின்றனர்

நமது கவர்ன்மெண்டார் வருஷாவருஷம் சுமார் 2·7 கோடி கல்வியில் செலவிடுகின்றனர். காலேஜ்களில் சுமார் 1.15லக்ஷம் செலவிடுகின்றனர். காலேஜ்களில் மற்றவர் செலவு செய்ததெல்லாம் சேர்த்தால் 29.5 லக்ஷம் செலவாகிறது. இதில் மூன்றிலொரு பங்குக்குமேல்—37.2%—மாணவர்களிட மிருந்து சப்பள வசூலில் வருகின்றது. ஏனைய மாகாணங்களில், ஐ. மா. அஸ்ஸாம், ஒரிஸ்ஸா முதலிய மாகாணங்களில் கவர்ன்மெண்டார் சம்பள வருமானத்தைவிட அதிகமாகவே உயர்தரக் கல்வியில் செலவழிக்கின்றனர்.

### யாரைப் பாதிக்கின்றது ?

வழக்கம்போல் ஏழை மக்களைத்தான் காலேஜ்களில் படிக்கும் மாணவர்களில் ஏழையென சர்க்கார் ரிப்போர்ட்டிலேயே கொடுக்கப்பட்டிருக்கும் நம்பர் 2450. மேலும், பிறர் கொடுக்கும் சிறு தர்மங்களாலும், தாங்கள் பெறும் ஸ்காலர்ஷிப்புகளாலும் படிப்பவர்கள், இச்சம்பள உயர்வால் அதிகப் பணத்திற்குப் பிச்சை எடுக்கவேண்டும். இல்லையேல் படிப்பையே நிறுத்திவிட வேண்டி நேரிடும்.

தற்சமயத்தில் உத்திரவிடப்பட்ட உயர்வு, இன்டர்மீடியட் வகுப்பார்க்கு 100க்கு 9 விகிதமும், பி. ஏ. வகுப்பார்க்கு, 12 விகிதமு மாகின்றது. கடன் நிவாரண மசோதாவில் கூட 100க்கு 6 விகிதம் தான் உயர்வான வட்டியெனக் கூறப்பட்டிருக்கின்றது!

மேலும், இந்திய மாணவர்கள் ஏழ்மைப்பட்டவர்கள் ; பள்ளிக் கூடச் சம்பள உயர்வுகள் அவர்களை மிகவும் பாதிக்கும் என்று சாட்லர் கமிஷன் கூறியிருக்கின்றது.

### இக்குறை - மாணவர்களுக்கும் பொது ஜனங்களுக்கும்

இப்புள்ளிகளினின்று காலேஜ் படிப்பின் சுமை நன்கு தெரியும். ஆதலால்தான் மாணவர்களாகிய நாங்கள், நியாயமான சம்பளக் குறைவு-100க்கு 50 விகிதமான சம்பளக் குறைவு வேண்டுமென்று கேட்கின்ருேம். இதற்கு வேண்டிய அளவு வேண்டுகோளும் செய்வோம். அதைப்பெறும் வரை சண்டை செய்வோம்.

இவ்வாறு நாங்கள் கேட்டுக் கொண்டிருக்கும் நிலையில் இச்சம்பள உயர்வுகள் மிகப் பிற்போக்கான செயலாம்! நாங்கள் கேட்கும் கோரிக்கை எங்களுடையது மட்டுமல்ல. இந்தியப் போது ஜனங்களுடையதே - எங்களை விட எங்களுக்குச் சம்பளங்கள் கோடுத்துப் படிக்கவைப்பவர்களாகிய எங்களது தாய்தந்தையரையும், மேல் படிப்பு தம் மக்களுக்குக் கோடுக்க வேண்டுமேன ஆசையுள்ள பல இந்தியத் தந்தையரையுமே கடைசியில் இச்சம்பளப் பளு பாதிக்கின்றது.

நமது ராஜதானியிலுள்ள மாணவர்களனைவரும் அங்கங்கே உள்ள காங்கிரஸ் சபைகளுடனும் ஏனைய பொது சங்கங்களுடனும் சேர்ந்து இதைக் கண்டனம் செய்ய கூட்டங்கள் கூட்ட வேண்டுமென்று கெஞ்சிக் கேட்கின்ருேம். இக்குறைகளை மாணவர்களுக்கும், பொது ஜனங்களுக்கும் எடுத்துக் கூற வேண்டும். அவர்களது தீர்மானங்களை, பத்திரிகைகளுக்கும், எங்களுக்கும், கவர்ன்மெண்டாருக்கும் அனுப்பவேண்டும். காங்கிரஸ் மந்திரிகள் அவர்களது ஊர்களுக்கு வரும்பொழுது ஊர்வலங்கள் செய்து, அவர்களிடம் இக் குறையைத் தெரிவிக்க வேண்டும். பொதுச் சங்கங்களும் இவ்விஷயத்தில் ஆதரவளிக்க வேண்டுகின்ருேம்.

# புதுச்சேரி கடிதம் — (வி. சுப்பையா)

புதுச்சேரியிலுள்ள தொழிலாளர், அரசியல் விஷயங்களைப் பற்றி தங்களுக்கு நீண்ட நாட்களாக தெரிவிக்கவில்லை. நான் எல்லா வியாபாரத்திலும் வேலையிலும் ஈடுபட்ட தொழிலாளர்களுக்கு அவரவர் தொழில்கள் சம்பந்தப்பட்ட சங்கங்களை ஏற்படுத்தியிருக்கிறேன். தொழிலாளர் ஒற்றுமையை எந்த சூழ்ச்சி செய்தும் யாரும் கலைக்க முடியாத திருப்திகரமான நிலைமை இங்கு நிலவி இருக்கிறது. இங்குள்ள அரசியல் வாதிகளும், கொள்ளைலாபப் பேராசைப் பிடித்தலையும் முதலாளிகளும், தொழிலாளர்கள் வர்க்க உணர்ச்சி பெருகி வருவது தங்கள் பிழைப்பிற்கு ஆபத்து என கூறத்தலைப்பட்டனர். இங்குள்ள சர்க்கார் அதாவது கவர்னர், போலீஸ் அதிகாரிகள், சேனை வீரர்கள் மற்றுமுள்ள பிரெஞ்சு அதிகாரிகள் அனைவரும் முதலாளிகளுடனும், சுயநல நோக்கங் கொண்ட அரசியல் வாதிகளுடனும் சேர்ந்துகொண்டு, எங்கள் சமாதான இயக்கத்தின் மேல் காட்டுமிராண்டித் தனமான அடக்கு முறைகளை பிரயோகிக்கத் தலைப்பட்டனர்.

இன்று புதுச்சேரியிலுள்ள கவர்னர் தொழிலாளர்களின் பரம விரோதி. 1937ம் வருஷத்திய முதல் 6 மாதகாலம் தொழிலாளர்கள் படுகொலை செய்யப்பட்டவிபரமும், தொழிலாளர் சங்கம் ஏற்படுத்த முடியாத ஓர் நிலையும் இருந்தது. இந்த கவர்னரின் மிலேச்சத்தனமான அடக்குமுறையைக் கண்டபின், நான் இந்த அக்கிரமங்களையும் தொழிலாளர் குறைகளையும் நேரில் தெரிவித்து வர பாரிஸுக்கு போக நேரிட்டது. பாரிஸ் விஜயத்தால் கீழ் கண்ட உரிமைகள் கிடைத்தன.

தொழிலாளர் சட்டங்கள் தோன்றி, அமுலுக்கு வந்தன. சங்கம், கூட்டம் கூடும் உரிமைகளும், தினம் 8 மணி நேர வேலையும் பெற்றபின் நிலைமை, ஓர் அளவிற்கு திருப்திகரமாய் இருந்தது. பிரஞ்சு தேசத்தில் ஜனங்கள் சர்க்கார் வீழ்ச்சியிலிருந்து, இங்குள்ள கவர்னர் பழைய கருப்பனுக விளங்குகிறார். அடக்கு முறைகளை கையாண்டுவருகிறார். அவர் தொழிலாளர் இயக்கத்தை அடியோடு ஒழிக்க அடக்குமுறைகளை கையாளுவதில் எல்லையில்லா அளவிற்கு வந்து விட்டார். 1937ம் வருஷம் அக்டோபர் மாதத்திலிருந்து கவர்னர் கட்டுப்பாடான கொள்ளைக்காரர்களை அனுப்பி தொழிலாளர்களை தாக்கி தொந்தரவு கொடுத்தார்.

சென்ற வருஷம் அக்டோபர் மாதம் சகல பொதுக்கூட்டங்களையும் ஊர்வலங்களையும் தடை செய்து விட்டார். இந்த வருஷம் ஜனவரி மாதம் அந்த தடை உத்திரவுகளை தள்ளுபடி செய்துவிட்டார். தடை உத்திரவுகள் இருந்த விடத்திற்கு போய் விட்டபடியால், தொழிலாளர்கள் அவர்கள் பக்கங்களிலுள்ள முனிசிபாலிட்டிகளை கைப்பற்றினர். புதிய அரசியல் வர்க்க உணர்ச்சியின் புயற்காற்றில் கவர்னர் கையாண்ட சகல அடக்குமுறைகளும் அடித்துக்கொண்டே போகப்பட்டன. மீண்டும் கவர்னர் ஓர் அவசரச் சட்டத்தின் மூலம், கூட்டங்களையும் ஊர்வலங்களையும் 23—4—38ந் தேதியிலிருந்து தடை செய்துள்ளார். அதோடு புதுச்சேரியில் பிரசுரிக்கப்பட்டு வந்த "சுதந்திரம்" என்ற தொழிலாளர் பத்திரிகையை 15-6-38-ந் தேதியிலிருந்து வெளிவராதபடி செய்து விட்டார். பொதுக்கூட்டங்களை தடை செய்தபின், பிரெஞ்சு-இண்டோ--சீனுவிலிருந்து சைன்யங்கள் வரவழைக்கப் பட்டன. சைன்யங்கள் புதுச்சேரிக்கு வந்ததிலிருந்து ஜனங்கள் அசாதாரண சம்பவங்களை செய்ய தூண்டி வருகிறது சர்க்கார். புதுச்சேரியில் ரத்தகள மேற்படக்கூடிய சம்பவங்களை சிருஷ்டிக்க அரும்பாடு பட்டு வருகிறார்கள்.

## புதுச்சேரி தோழர் சுப்ரமண்யம் கைது செய்யப்பட்டார்

இந்த 4 மாத காலத்திற்குள் பல முறை பட்டாளத்துருப்புகள் எங்கும் நிறுத்தப்பட்டன. இவர்கள் மூர்க்கத்திற்கு பலர் பலியானார்கள். இதுபோலவே, போலீஸ்காரர்களுக்கு எதேச்சாதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது. எந்த நிமிஷத்திலும் போலீஸார் மக்களை சுட்டுத் தள்ளலாம் என உத்திரவு பிறந்தது. உடனே தலைகால் தெரியவில்லை போலீசாருக்கு. ஜனங்களுக்கு ஆத்திரத்தை கிளப்பிவிட்டு சில விடங்களில் மக்களை சுட்டுத் தள்ளினர் போலீசார். 16-5-38ந்தேதி போலீஸ் துப்பாக்கிப் பிரயோகத்தால், 12 வயது, 20 வயதுள்ள இரு வாலிபர்கள் உடனே இறந்தனர். 6 வயதிலிருந்து 15 வயதுவரையுள்ள 7 சிறுவர்கள் படுகாயமடைந்தனர். சென்ற வருஷம் அக்டோபர் மாதம் 'சிருஷ்டிக்கப்பட்ட வழக்கின்' முடிவு காரணமாக 16-ந்தேதி பல பிரபல தொழிலாளர்கள் கோர்ட்டாரால் தண்டிக்கப்பட்டனர். ரோடியர் மில் தொழிலாளர் யூனியன் தலைவர், சவானு ஆலைத் தொழிலாளர் யூனியன் காரியதரிசி, மற்றும் பல பிரபல தொழிலாளர்கள் கைதுசெய்யப்பட்டது மன்னியில், பிரபல தொழிலாளர் தலைவரான தோழர் சுப்ரமணியமும் ஒரு பொய் கேஸ் சம்பந்தமாக 16௳ கைது செய்யப்பட்டார். 19௳ விடியற்காலை 4மணிக்கு சர்க்கார் வக்கீலும் கமிஷனரும், 100 பிரெஞ்சு சேனை வீரர்களும் 6 போலீஸ்காரர்களுடன் என் இருப்பிடத்தில் பிரவேசித்து, அறை கதவுகளை யெல்லாம் உடைத்து, குண்டு மருந்துகள் ஏதாவது இருக்கின்றனவா என்று தேட ஆரம்பித்தார்கள். ஆனால் ஒன்றுங் காணுது ஏமாந்துபோனார்கள். சோதனை முடிந்தபின், போலீஸ்கமிஷனர் ஆபிஸுக்கு சேனை வீரர்கள் பாதுகாப்பில் என்னை அழைத்துப் போனார்கள். பிறகு காலை 8 மணிக்கு விடுதலை செய்து விட்டார்கள். அதே நேரத்தில், எங்கள் தொழிலாளர் பத்திரிகை பிரசுரமாகும் சுதந்திரம் அச்சாபீசை (லிபர்ட்டி பிரஸை)யும் அந்த தடபுடலோடு சோதனை யிட்டனர். என் வீட்டிலும், சுதந்திரம் அச்சாபீசிலும் இருந்தவர்கள் கைது செய்யப்பட்டு, பிறகு விடுவிக்கப்பட்டார்கள். இந்த அடக்குமுறை அநியாயத்தோடு இங்கு ஆட்சி நடந்து வருகிறது.

இங்கு நடக்கும் விஷயங்களையும், நிலவியுள்ள பயங்கர நிலைமையையும் தங்களுக்கு நான் தெரிவிப்பதோடு, கூட்டங்கள் போட்டு புதுச்சேரியில் நடைபெறும் சர்க்கார் காட்டுமிராண்டித்தனத்தை கண்டிப்பதோடு, எங்கும் இங்குள்ள அடக்குமுறை ஆட்சியை விளம்பரப் படுத்த வேண்டுமென்று உங்களை கேட்டுக் கொள்கிறேன்.

JANA SHAKTI

# ஜனசக்தி

(சனிக்கிழமைதோறும் வெளிவரும்)

## WHAT TO READ

If you are a socialist, if you are interested in Modern Thought and the trend of Modern World movements, you must know What books to read, what Magazines and Weeklies to subscribe to:—

### BOOKS

1. "Why socialism" available in Tamil—Jaiprakash.
2. "Communist manifesto" Marx-Engels.
3. "State and Revolution"
4. "Address to the Communist League"
5. Lenin by Ralph-Fox.
6. Communist answer to the World's needs—J. Hecker.
7. What are we to do?—J. Stratchey
8. Theory and Practice of Socialism—Strachey.
9. Russia Purakshi, (Tamil).
10. Chinavai Par, (Tamil).

### MONTHLY MAGAZINE (English)

The New Age—Madras.
Labour Monthly—London.
Left Review—London, 2, Partan St.,
Current History—New York.

### WEEKLIES

Jana Shakti, in Tamil—Madras.
Vahini, Telugu—Madras.
Praja Bhandu, Telugu—Madras.
Navashakti, Telugu—Rajmandry.
Prabhatam, Malayalam—Calicut.
The National Front, English—Bombay.
The Congress Socialist " "
The Kranti, Marathi—Bombay.
The Comrade, English—Calcutta.
The Sathee, Hindi—Calcutta.
Janata, Hindi—Patna.
Sangharsh, Hindi—Lucknow.
Lal Jhanda, Hindi and Urdu—Cawnpore.
Kirti, Urdu—Meerut.



Printed by R. Balan at Jesu Press, Edited and Published by P. Jeevanandan,
270, Triplicane High Road, Madras.